



கணபதி துணை.

# கோடீச்சரக்கோவை.



காப்பு.

கோடீச்சரனுதவுகோடிவிநாயகவி க்
கோடீச்சரக்கோவைகூறுவிப்பாய் - நாடிவந் தி
வஞ்சகமாதிமருவுமெளியேன்வலி ய்
நெஞ்சகத்தேநீயொருசார்நின் - - - - - - - - - - று.



காட்சி.

சீர்கொண்டதாமரைப்போதைந்திரண்டுசெழுமுகைந ல்
வேர்கொண்டநீலமிரண்டோர்குமுதமிவற்றொடுதெ ண்
ணீர்கொண்டவேணியர்கோடீச்சுரேசர்நெடுவரைமே ற்
கார்கொண்டகாவினிடையிலொராவிநங்கண்ணுற்றதே. (௧)

ஐயம்.

பாரோவலரியின்பாருங்கோகஞ்சப்பார்வையண் ண
ணூரோவிதிதன்பதியோமதியோடொளிரும்விண்ணி ற்
றேறோதைசூழ்தருகோடீச்சுரநித்தர்திண்சிலம் பி
னேரோர்வடிவெடுத்தன்னவின்றொளொடிலங்கிடமே. (௨)

தெளிதல்.

கடியேறுகொன்றையர்கோடீச்சுரவெற்பிற்கண்டதொ ரு
கொடியேயிதனடிக்கொண்டதுபூமுகங்கொண்டதுவே ர்
முடியேறியவண்டுருநோக்கியையுறன்முன்னுமிந்த ப்
படியேயிதனிலையென்றுநெஞ்சேயிவைபன்னிடுமே. (௩)

குறிப்பறிதல்.

பாலார்மொழிபங்கர்கோடீச்சுரவெற்பின்பானுறு
மாலாயினுமந்தமால்சோர்ந்துமுன்பின்மகிழ்வுபெ
மேலாழிதன்னுள்விடத்தோடமிர்தம்விளைந்ததொத்
நூலாமிடையினள்வேல்விழித்தோன்றியநோக்கங்களே.

இரந்துபின்னிற்றற்கெண்ணல்.

கனமுந்துறுகண்டர்கோடீச்சுரவெற்பிற்கண்டிடுமி
னினமுந்துவளிடையாளின்பநல்குநம்மின்னலெல்
மனமுந்துளைக்கின்மனமேவருந்திவளருமிக்
தனமுந்தையையுமுள்ளாரில்லையென்பர்கொல்சார்ந்தவர்க்கே

இரந்துபின்னிலைநிற்றல்.

சேவார்கொடியினர்கோடீச்சுரேசர்சிலம்பிலென்மெய்
பூவாளிதைத்தபுண்ணின்கணின்கண்ணெனும்பூமரு
மேவாவதனையுமேவிப்பாராமுகமேவியிங்ங
பாவாயவண்பாவாய்கிலர்போலநிற்றல்பண்பாவுனக்கே.

முன்னிலையாக்கல்.

நாட்டங்கொள்பாலத்தர்கோடீச்சுரமன்னதன்னுதலா
கூட்டங்கொள்பாங்கியர்தம்மைவிட்டீண்டுக்குறுகிமத
வேட்டஞ்செயுமிடத்தேதனிநின்றதென்மென்மையொ
தோட்டங்கொள்காவலர்க்காவலுற்றேவிதுசொல்லுகவே.

வண்டோச்சிமருங்கணைதல்.

வேழமுரித்தவர்கோடீச்சுரநித்தர்வெற்பிலிந்
வேழையிடத்துப்பலகீதம்பாடியிளைத்திவட
கூழைவிரும்பியுறைவண்டுகாள்கணங்கொண்டுசெஞ்
சூழுமக்காவலர்நல்கமுதார்ந்துசுகம்பெறவே.

இதுவும்வண்டோச்சிமருங்கணைதல்.

விடையுறுகேதனர்கோடீச்சுரவெற்பின்மேவுமன்
நடையினருங்களையென்கண்ணெனைமுன்னவின்றிடுத
புடையுறுநானறிவேன்வண்டர்நீவிரிப்போதிவ
ளிடையைமுறிக்கத்தலைப்பட்டிருக்கின்றிரொன்னிதுவே.

மெய்தொட்டுப்பயிறல்.

நெய்ப்பட்டசூலத்தர்கோடீச்சுரவெற்பிலீடுசா
லைதப்பட்டமாரனெய்தாலுமெய்தானரந்தையடையோ
கைப்பட்டமாதனமாதனமீங்குநங்கைப்பட்டதா
மெய்ப்பட்டிடுதனம்பெற்றோர்க்கெவ்வின்பமுமேவுறுமே.

பொய்பாராட்டல்.

மெய்யன்பருக்கருள்கோடீச்சுரநித்தர்வெற்பணங் கே
பொய்யன்றிவைநின்னிடைக்கிணையாமெனப்போந்துசில ர்
கையினடிபட்டரற்றுந்துடியதைக்கண்டுவெம்போ ர்
செய்யுங்கணைமதன்கண்மறைவாகித்திரிந்திடுமே. (௰௧)

இடம்பெற்றுத்தழாஅல்.

படந்திகழ்பூண்புனைகோடீச்சரவள்ளல்பைம்பொன்வெற்பி ன்
மடந்தைநற்பொன்னெனுநீயுந்தண்சோலைவளநிழலு ந்
தடம்பெறுமாரன்கணையுமிங்கேய்ந்திடச்சார்ந்தனன் யா
னிடம்பொருளேவலெல்லாமுளவெனக்கென்குறையே. (௰௨)

இதுவுமிடம்பெற்றுத்தழாஅல்.

தக்கோர்புகழ்சண்பைக்கோடீச்சுரநம்பர்தம்மகனார் க்
கக்கோலக்காவிற்றம்பொற்றாளந்தாமீந்தடிமையினை ந்
இக்கோலக்காவிலுன்பொற்றாளநீநல்கிடவரிக ண்
ணிக்கோதைசெய்குழன்மாதேயின்றுன்னைவிடுத்தனனோ. (௰௩)

வழிபாடுமறுத்தல்.

வலிவுறுசூற்படைக்கோடீச்சுரேசர்மணிவரைமே ற்
பொலிவுறுதோழியர்பாங்கியராத்தனிப்போந்துநின் று
மெலிவுறுமென்றனைக்காத்தருள்சாந்தமிசைக்கொடுத ண்
மலிவுறுபோதமுடனளிவாய்ந்துறைமாதவியே. (௰௪)

இடையூறுகிளத்தல்.

கொந்தார்மலர்ச்சடைக்கோடீச்சுரேசர்குவட்டில்வ ள
ரந்தாமரைத்திருவேநீயெனக்கெவ்வளவுதன ந்
தந்தாலுமாங்கதொருபெரிதன்றுதரிலமையு ம்
பைந்தாட்குவளைநிகருன்விழிபருட்பார்வையதே. (௰௫)

இதுவுமிடையூறுகிளத்தல்.

துண்டமதிபுனைகோடீச்சுரேசர்சுடர்க்கிரிவா ழ்
பண்டருந்தீஞ்சொன்மயிலனையாயிந்தப்பாரிடத் தே
தண்டரும்போதெங்கெனத்தேடிவண்டுகள்சார்தலுண் டு
வண்டிடந்தேடிநின்கைப்போதுசார்ந்ததுமாவியப்பே. (௰௬)

நீடுநினைந்திரங்கல்.

வில்லார்சலவிற்கோடீச்சுரேசர்தம்வெற்பிலிந் து
நல்லாள்பதங்கைமுகம்வாய்தடங்கோணயநமி லை
யெல்லாமினியமலராவியற்றியிதையமொன் றுங்
கல்லாவகுத்ததென்றேவிதியாகியகைதவனே. (௰௭)

மறுத்தெதிர்கோடல்.

நடநவிலீசர்தென்கோடீச்சுரவெற்பிறைமினை ய்
வடன்மதன்றன்னிடமேய்ந்திடப்போம்விழைவாவந னை
விடலருநாண்கொண்டகத்தசைத்தானுமெலச்செனுமா ற்
கடல்புரண்டான்மற்றதனைத்தடுக்குங்கரையில்லையே. (௰௮)

வறிதுநகைதோற்றல்.

சகமுழுதும்புகழ்கோடீச்சுரேசர்தடஞ்சிலம்பி ற்
ககமுலவுந்தளிர்க்காவிடத்திம்மணிக்கட்கரும்பி ன்
முகமதிற்றோன்றியமுத்தநகைக்கயன்முத்தந கை
நிகரலநேரொன்றுளைத்தாற்பழிப்பாநிகழ்தற்கே. (௰௯)

முறுவற்குறிப்புணர்தல்.

வகைபூத்தசீருடைக்கோடீச்சுரநித்தர்மால்வரைப்பா ற்
றொகைபூத்தவேர்கொண்டளிகொண்டுநீடுசுகம்பயிலு ந்
தகைபூத்தகாவில்வளரிம்முலைக்கொடிதன்னிடத்தோ ர்
நகைபூத்ததின்னதிலோர்மணந்தோன்றிடுநந்தமக்கே. (௨௰)

முயங்குதலுறுத்தல்.

செல்வங்கிளரொழிற்கோடீச்சுரநம்பர்திண்சிலம்பி ன்
வில்லங்கெடுத்தெதிர்வேள்படைசூழ்வரமேவியிங்கு ச்
சொல்லங்கமுற்றணியாரின்னகாரிகைதுன்னுரங்கொ ள்
வல்லங்கைக்கொண்டனங்கூடல்பெற்றேமுண்மகிழ்வுறவே.(௨௧

புணர்ச்சியின்மகிழ்தல்.

மானேயிக்காவோர்தடநீகமலமலர்மலர்வ ண்
டேனேவளருநின்பேரின்பம்வந்துனைச்சேர்ந்ததுற் ற
நானேயத்தேனையுண்வண்டுகண்டாய்நன்னதியுட னே
வானேர்மதியணிகோடீச்சுரநித்தர்மால்வரைக்கே. (௨௨)

புகழ்தல்.

வெளிதருநீற்றரன்கோடீச்சுரவண்ணல்வெற்பின்வரை ர்
குளிருமைக்கூந்தலுன்கண்ணோக்கிமீன்பயங்கொண்டலை யு
மொளியுறுமின்னுன்னிடைநோக்கிவானிலொளித்திருக்கு ங்
களியுறுமன்னம்பறந்திடுநின்னடைகாண்பொழுதே. (௨௩)

எற்புறவணிதல்.

சொல்லணிநீடுபொருளணிமேற்பலசூழ்வநற்று ட்
சில்லணியொன்றின்றென்றேயந்ததைம்வறுதெரித்தமு லே
வல்லணிமீதினுலாவுறுகோவைவனைந்திடு கே
னல்லணிகண்டத்தர்கோடீச்சுரமன்னவாரணங்கே. (௨௪)

அணிந்துழிநாணியதுணர்ந்துதெளிவித்தல்.

பணிபெறுபூணினர்கோடீச்சரவெற்பின்பான்மனைஞ்செ ய்
கணிபெறுசோலையின்மாதேயுலாவுன்றன்கண்ணிலங் கு
மணிபெறுநன்மையுறவீண்டெழுதினன்மன்னிமுன் போ
லணிபெறவோதிமுடித்தேனிதிலொன்றுமையமின்றே. (௨௫)

பெருநயப்புரைத்தல்.

பங்கமுறுதிருபோதுமலர்ந்துபணியிறை டு
திங்கட்கெய்யாதுமுண்மேல்வதியாதுதிலகமுற்றி ம்
மங்கையெழின்முகம்போலோர்நளினமலர்வண்டு கா
ளெங்குளதோதுமின்கோடீச்சுரேசரிமயத்திலே. (௨௬)

தெய்வத்திறம்பேசல்.

மேருமுடியிருப்போருமதனடிமேவின ரு
நேருறநோக்கிமகிழ்ந்திடவேவன்னநீள்விழியா ய்
வாருறுவேணியர்கோடீச்சுரேசர்வளைத்ததென் ச்
சேருநச்செய்ததுநம்மைமுன்னூழின்றிறமதுவே. (௨௭)

பிரியேனென்றல்.

மறியாரிடத்தினர்கோடீச்சுரேசர்மலரடிசெ ந்
நெறியாலடைந்தவர்நீங்குவரோதுடிநேரிடையா ய்
வறியார்மனைப்பொன்மழைபோன்மருவுனைவைத்தகல் ற்
கறியாதவனலனின்னினும்வேறென்னரும்பொருளே. (௨௮)

பிரிந்துவருகென்றல்.

தூவென்றகுலத்தர்கோடீச்சரவெற்பிற்குழலே நீ
போவென்றுரைக்கினும்போகேஞொடிவளைப்போதுசெல ற்
கேவென்றகண்ணியுளதொன்றிரோனங்கிருந்திடினு ம்
னாவென்றுகைக்கொடுவந்திடுமீங்கென்மனம்விரைந்தே. (௨௯)

இடமணித்தென்றல்.

சங்கரரங்கணர்கோடீச்சுரமன்னதாழ்குழ லா
யுங்கள்புனத்திலுலாவுங்கிளிகளுமொண்மயி லு
மெங்கணகர்ப்பளிங்கார்சுவர்த்தோன்றலையென்றுமதி ற்
றங்குறுஞ்சித்திரசித்திரமீதெனச்சாற்றுவரோ. (௩௰)

தெளிவு.

சிங்கத்துரிபுனைகோடீச்சுரநித்தர்தென்மது ரை
தங்கத்தமிழ்ச்சங்கத்தார்சொற்றவறிலுஞ்சார்ந்துநந்த ஞ்
சங்கத்திருந்துதமிழாய்ந்தவர்சொற்றவறுவ ரோ
விங்கிற்றுறையேவருவார்மனமேதெளிவின்னதுவே. (௩௧)

செல்லுங்கிழத்திசெலவுகண்டுளத்தொடுசொல்லல்.

மின்வார்சடையினர்கோடீச்சுரநம்பர்வெற்பின்மத ன்
றன்வார்சிலையுயிர்தியின்சாபமுந்தம்முடியு ங்
கொன்வார்கணைகளுநம்வெம்போரதனிடைக்கொண்டுனையு ம்
பின்வாவென்றேகிடல்பார்மனமேயொருபெண்ணரசே. (ருஉ)

பாகனொடுசொல்லல்.

வின்மதன்றன்னைவெல்கோடீச்சுரநம்பர்வெற்பிடத்து தீ
தன்மைமன்கண்வைத்தென்மனந்தான்கொண்டுதங்கித்தங் கி
முன்மதிநாணீர்த்திடப்பின்பயந்தள்ளமுத்தந கை
மென்மருங்கோர்மின்செலல்பார்வலவவியன்பொழிற்கே (ருங)

ஊடவெள்ளம்வழிபடக்கண்டிதுமாயமோவென்றல்.

அண்டர்தம்மாதர்நடுவிந்திராணியிருயத்துறாஉ ம்
வண்டிருமாதிவட்கோடீச்சுரநித்தர்மால்வரையி ந்
கண்டிருப்போமங்கொருகாற்புணரக்கருத்தினிச் சை
கொண்டிருப்போமன்றிக்கூடியிரோமுன்குறித்திடினே. (ருச)

வாயில்பெற்றுய்தல்.

நஞ்சிற்பொலிகண்டர்கோடீச்சுரவெற்பினண்ணுமிந் த
வஞ்சிக்கொடிதன்மலர்முகமேவியவண்டுசென்ற ப்
பஞ்சித்தளிரடிப்பூங்கொம்பர்மீதெதிர்பாய்தலெண்ணி ன்
விஞ்சிக்கொடிக்கந்தக்கொம்பர்பற்றுமென்றுமேற்சொல்வதே.

பண்புபாராட்டல். [ருரு)

கலையொன்றுவேணியர்கோடீச்சுரேசர்கயிலையென் று
மலைமுன்விரைத்தமேருவுஞ்சென்னிவணங்கிநின் ற
தலையுற்றதொன்றன்றியாவுங்குறைபட்டவாமெனினி ம்
முலைநகையாண்முலைக்கொப்பென்றெதனைமொழிவதுவே (ருசா

பயந்தோர்ப்பழிச்சல்.

பந்தாடுமைபங்கர்கோடீச்சுரநித்தர்பைம்பொன்வெற்பி ன்
வந்தாகவஞ்செயும்வேள்வெங்கணைகளைமாற்றியென்ற ன்
சிந்தாகுலந்தீர்த்தினிதாண்டருளியதேமொழியை த்
தந்தார்கண்மாமனுமாமியுமாகுகதாரணிக்கே. (ருஎ)

கண்படைபெறாதுகங்குனோதல்.

நதியுறுவார்சடைக்கோடீச்சுரேசர்நளிர்வரைவா ன்
மதியென்மதியைமயக்கும்வண்டார்மதன்வண்டலைக்கு ம்
பொதியமலையத்தனிக்கான்மலையும்புகலுமினி த்
துதியிரவெல்லைகண்டெல்லையெப்போதிங்குக்காண்பதுவே (ருஅ

தந்ததெய்வந்தருமெனச்சேறல்.

வெந்நாககங்கணர்கோடீச்சுரேசர்வியன்சிலம்பி ந்
செந்தாண்மலர்மேற்றிருவனையாளைமுன்சேர்த்ததெய் வ
மிந்நாளுஞ்சேர்த்திடுமீதல்கற்றேறொன்றுமீவர்கண்டா ய்
சொன்னவெழுநெஞ்சமேசெல்குவோமந்தச்சூழ்பொழிற்கே. [(௩௯)

முந்துறக்காண்டல்,

விழியொருமூன்றுடைக்கோடீச்சுரவள்ளல்வெற்பின்ம த
னழகெனும்வெள்ளத்தகச்செங்கையாசையந்தூரிகைதோய் த்
தெழுதியவோவியமீதென்னவோர்மங்கையின்னுருவா ய்
நிழல்செயிக்காவினந்நறவப்பேறெதிர்நிற்கின்றதே. (௪௰)

முயங்கல்.

விடைபட்டகேதனர்கோடீச்சுரநம்பர்வெற்பின்மலர் த்
தொடைபட்டகோதையிவள்வாயமிர்தச்சுவையினுக்கு ப்
படைபட்டவேலையமுதொத்திடாதுபகரும து
கூடைபட்டதேயன்னதாகும்விண்மேவுகடவுளர்க்கே. (௪௧)

புகழ்தல்.

அயனோர்ந்திடாமுடிக்கோடீச்சுரநம்பரம்பொன்வெற்பி ற்
புயலினநீரிவள்கூந்தற்குமுன்னர்ப்புகன்றிடுமு ட்
பயமுற்றிருந்திடினேர்தான்சிறிதுபயமொழிந் தா
ளாமுற்றிடர்கடற்போய்வீழவேண்டுநவின்றனனே. (௪௨)

ஆயத்துய்த்தல்.

மீயுற்றபூம்பொழிற்கோடீச்சுரநம்பர்வெற்பிடத்தி வ்
வேயுற்றசாரற்றினைப்புனத்தேயன்றென்மீதுவைத் த
நேயத்தனைந்துகாரணஞ்செய்தாயினிநீயகன்று ன்
னாயத்துறைமணியஞ்செய்திடுபணியாரணங்கே. (௪௩)

தலைவன்பாங்கனைச்சார்தல்.

செறிப்புறுவான்புகழ்க்கோடீச்சுரேசர்சிலம்பிடை நா
முறுப்பமைநன்னூலிடைநீடுமைம்பாலுறுதொடர்பை ச்
சிறப்புறுகேள்விபெறுபாங்கனுக்குத்தெளிவுபெற ச்
குறிப்பினுமோதும்வெளிப்படைச்சொல்லினுங்கூறுதுமே. [(௪௪)

பாங்கன்றலைவனையுற்றதுவினுதல்.

மன்றுடுமீசர்தென்கோடீச்சுரவெற்பவாய்மையு னை
யென்றுதவரிடத்தொன்றினையோகடலேழுமொன்றாய்ச் ச்
சென்றார்த்தெழினுமதியோடிரவிதிசைகெடினு ங்
குன்றாதநின்புயக்குன்றமென்னேவிந்நன்குன்றுற்றதே. (௪௫)

தலைவனுற்றதுரைத்தல்.

விரித்துச்சொலற்கென்றனன்முடியாதன்பமேற்பகையை ச்
சிரித்துச்சிதைத்திட்டகோடீச்சுரேசர்சிலம்படியி ற்
சரித்திடுமென்மனப்போதகம்போம்வழிதன்னினின்றோ ர்
வரிக்கண்மின்னாரங்குசத்தாலதனைமடக்கியதே. (௪௬)

பாங்கன்கழறல்.

கடுவமர்கண்டத்தர்கோடீச்சுரேசர்தண்கார்வரைமே ற்
கொடுவடிவேலவிருபால்வழக்குங்குறித்தெவர்க்கு ம்
படுவுறவோதிடுநீயின்னதென்னப்பகுத்துரைக் கு
நடுவறியாவொருபேதைகண்ணென்னிங்குநண்ணியதே. (௪௭)

தலைவன்கழற்றெதிர்மறுத்தல்.

கனவல்விடபத்தர்கோடீச்சுரமன்னலகன்னிரு த
வினவண்மணிக்குழைமாமுலைபார்வையெனவுரைக்கு ந்
தனுவுமகரமுங்கும்பமுமீனமுஞ்சார்ந்தங்கு நீ
முனைமுறநோக்கிடினென்பவிவ்வாறுமொழியலையே. (௪௮)

பாங்கன்றலைவனைப்பழித்தல்.

விரையார்கடுக்கையர்கோடீச்சுரவெற்பமேவிடுமு ன்
னுரையார்கலைமதியோர்மாதரைப்பணிக்கொல்கியதா ற்
றிரையார்சலிசுற்றிடத்தேயினியொருசிற்றெறும்பி ற்
கிரையாயிடுமகமேருவுநீடுமிமயமுமே. (௪௯)

தலைவன்வேட்கைதாங்கற்கருமைசாற்றல்.

தேன்வளர்கொன்றையர்கோடீச்சுரேசர்சிலம்பினய ற்
கான்வளர்மும்மதநால்வாய்களஞ்சக்கணைதொடுத்தே ன்
வான்வளர்சிங்கம்வரினும்விடேன்மதிவாண்முகத்தோ ர்
மான்விழிநோக்குமுன்கைவில்லுமம்பும்வழுவியவே. (௫௦)

பாங்கன்றன்மனத்தழுங்கல்.

பூங்கயிலாயத்தர்கோடீச்சுரேசர்பொதியவரை த்
தாங்கயிலோனுக்குநாமீண்டிசைமதிதன்குரவ ற்
காங்கணைநூற்குப்பொருள்கூறுதலொக்குமன்றியுநோ ய்
நாங்களையாதுபின்னுங்களையேற்றுதனன்கலவே. (௫௧)

தலைவனோடழுங்கல்.

மலையேறுகையரன்கோடீச்சுரவெற்பவானுறுமு ன்
கலையேறியமதிதாரணிபூங்கலந்திடொ ரு
தலையேதிருட்குத்தளர்ந்திடுமேல்வலிசார்த்துவ ரா
ரலையேழும்வெப்புறினெப்புனலாலதையாற்றுவதே. (௫௨)

எவ்விடத்தெவ்வியற்றென்றல்.

மின்னுறுசூற்படைக்கோடீச்சுரநித்தர்வெற்பவந்த ப்
பொன்னெழின்மான்கஞ்சப்பூவிடத்தோவிந்தப்பூவிடத் தோ
மன்னுறுநீள்விழிவாளியற்றேருவடிவாளியற் றே
வின்னலுறேல்புகலின்னதென்றெவ்விடத்தெவ்வியற்றே. (௫௩)

இவ்விடத்திவ்வியற்றென்றல்.

சேவணக்கேதனர்கோடீச்சுரநம்பர்தென்பழன ங்
காவணநள்ளாறிடமக்கமலைதன்கைவதச ப்
பூவணஞ்சத்திமுத்தங்கண்முறுவல்புரியளை கை
மாவனஞ்சாயலொண்மாயூரமுந்திவலஞ்சுழியே. (௫௪)

பாங்கனிறைவனைத்தேற்றல்.

நாடாளுமன்னவகூடார்புரத்தைநகைத்துவன்னி க்
காடாக்கியசிவன்கோடீச்சுரமன்னகாரிகை யை
யேடார்மலர்ப்பொழிலூடேகிநான்கண்டிவண்வரு வ
னீடார்வரைப்புயம்வாடாதுநின்றிடிமைப்பொழுதே. (௫௫)

பாங்கன்குறிவழிச்சேறல்.

செந்நெறிச்சேர்த்தருள்கோடீச்சுரேசர்சிலம்படி யை
யுந்நெறிகூட்டுமின்வைகாவிடமஃதோங்கதனு க்
கந்நெறியாமத்திருவேரகத்தையடையுநெ றி
யிந்நெறியாகுமிதுவேயிறைவனிசைத்திட்டதே. (௫௬)

பாங்கனிறைவியைக்காண்டல்.

மெய்யாகநூலினர்கோடீச்சுரநித்தர்வெற்பினன் சொ
லையாறதுதிங்களூர்திருவாலம்பொழிலதுமே ற்
கையாலொண்காந்தள்வரைமேவியாங்குக்கலக்குறச்செ ய்
மையார்கயற்கண்விசையமங்கைத்திருமற்றிவளே. (௫௭)

இகழ்ந்ததற்கிரங்கல்.

போரண்டுசூலத்தர்கோடீச்சுரவெற்பின்பொன்னிமரு ங்
கேரண்டமாபுரமேன்மைகொளின்னம்பரின்னவற் றை
நேரண்டநோக்கிடிருருகாரிதுநெஞ்சினெண் ணு
தாரண்டுவேலற்பழித்தனநம்மறிவத்தனையே. (௫௮)

தலைவனைவியத்தல்.

சூலாயுதத்தரன்கோடீச்சுரமன்னதோகையி வ
ணூலாமிடையொடுசேலானநோக்கினைநோக்கின ரி
மாலாகிநிற்பன்மலரோன்பிரமமருவிடுந ம்
வேலாணிவண்விட்டவனூற்றதாற்றிறன்மிக்கவனே. (௫௯)

## கோடீச்சரக்கோவை.

### தலைவியைவியத்தல்.

செக்கர்நன்மேனியர்கோடீச்சரேசர்சிலம்பிலிவ ள்
மைக்கண்சிதறியமால்விடந்தீர்த்திடும்வாயமிர் த
மிக்கதனப்பொற்குடநெடுங்காமமென்வேலையினி ன்
றக்கனவின்பக்கரையேற்றிடுநம்மரசனையே. (௬௰)

### தலைவன்றனக்குத்தலைவிநிலைகூறல்.

கரும்புறுகொன்றையர்கோடீச்சரேசர்சுடர்க்கிரிமே ற்
கரும்புருவச்சிலைதன்னொடுநீலக்கணையுங்கொ டு
பொரும்படைமாரன்றுணைபோலநின்றதப்பூங்கொடிவ ல்
லிரும்பனநெஞ்சதிருநறையூரவ்விரும்பொழிற்கே. (௬௧)

### தலைவன்சேறல்.

படித்தலம்போற்றிடுகோடீச்சரநம்பர்பைம்பொன்வெற்பி ன்
வடித்தடங்கண்ணிமுலையங்கையின்சொலின்வன்பகையெ ன்
றடித்திடுமோமுன்பறித்திடுமோநின்றதட்டிடு மோ
தடித்துறுபந்துசெங்காந்தள்பைங்கிள்ளையைத்தண்பொழிற்கே. (௬௨)

### தலைவியைக்காண்டல்.

செந்நெல்விளைவயற்கோடீச்சரநித்தர்திண்சிலம்பி ன்
மன்னவபேரின்பநீடமுதிவன்முன்வாசுகிந ற்
பன்னகம்பூட்டித்தனமலைமேலெனப்பன்னுவள்போ ற்
பொன்னிறமால்வரைகாட்டிநிற்கின்றனள்பொற்றொடியே (௬௩)

### கலவியின்மகிழ்தல்.

சலங்காத்தவேணியர்கோடீச்சரேசர்தடத்துரத் தி
லலங்காரவெழுத்தைசீர்மேவுபந்தமடிதொடைகொ ண்
டிலங்காவரருமுறுப்பியல்பாவுற்றிடுமினை ய
நலங்காமுறுகாரிகையின்பமீங்கெய்திநண்ணினமே. (௬௪)

### புகழ்தல்.

திங்கட்கொழுந்தணிகோடீச்சரேசர்சிலம்பிலி வ
ளங்கத்திற்காலமுகொத்திடுங்கஞ்சமனையமு கு
மங்குலைச்சார்ந்துறைமின்னெக்குமற்றைவடிவுகளு க்
கிங்கெப்பொருளினுங்காணேமுழுதுமியையவதுவே. (௬௫)

### பாங்கியோடுவருகெனப்பகர்தல்.

படையுற்றபூதத்தர்கோடீச்சரேசர்பனிவரை நூ
விடையுற்றிடுநல்லனமேநின்பாங்கிக்கிளியொளித் து
நடையுற்றிடுநவலனன்றவளொடுநாளைவந்தி க்
கடையுற்றிடினையன்றிடைநாடினெனிர்கைக்கொளுவே. (௬௬)

பாங்கிற்கூட்டல்.

எனைத்தேடியாள்சிவன்கோடீச்சுரவெற்பிலெய்திநின்னை ச்
சுனைத்தேடியாங்குறுங்காமனைத்தேடிடுந்தோழிமுன்னி ங்
குனைத்தேடினேனெனவொன்றேதியன்னளொடொன்றிடு நீ
கனைத்தேடியைவண்டுகொம்போதிபாடுங்கதுப்பணங்கே. (௬௭)

பாங்கியையுற்றேர்தல்.

கறையுறுகண்டத்தர்கோடீச்சுரநித்தர்கார்வரை மே
லுறையுமிம்மாதந்தமாதவர்போன்முன்னுணவொழித்தா ண்
மறைபுகல்வாளம்மனைவெறுத்தாளுடல்வாட்டமுற் று
ஏறையுமிவையிதனாலுற்றனவென்றறிந்திலமே. (௬௮)

ஐயந்தீர்தல்.

அரியமறைப்பொருடன்னைமுன்னால்வருக்காலடியி ற்
றெரியவுணர்த்தான்கோடீச்சுரமன்னதேமொழியி ன்
சரியைகிரியைகளையந்திரிபின்மைசார்ந்தினி து
விரியுறுயம்பாதோரிறையோகஞானம்விளக்கின்றவே. (௬௯)

பிறைதொழுகென்றல்.

அணிதாங்குகோடீச்சுரேசர்தங்கட்பொறியாதலினு ன்
மணிதாங்குவேலைமகிழ்வுற்றதாலுயர்வானகத்தி ற்
கணிதாங்குடிக்களின்காதலுற்பிறைகந்தனெக்கு ம்
பணிதாழ்கருங்குழன்மாதேபணியிற்பலன்றருமே. (௭௰)

சுனைவியந்துரைத்தல்.

தோடுறுங்காதினர்கோடீச்சுரநம்பர்தாய்வரை நீ
யாடுறும்போதிற்பிறழும்பணிகளவைதிருத்தி க்
கோடுறுநெற்றித்திலகமுந்தீட்டிக்குறுவெயரீ ந்
தேடுறுங்கோதைநின்கோதையிற்சூட்டியதெச்சுனையே. (௭௧)

சுனைநயப்புரைத்தல்.

தங்கந்தாத்தருமைக்கீந்திடுமெத்தர்நஞ்சமரு ம்
வெங்கந்தாத்தர்தென்கோடீச்சுரநித்தர்வெற்பிடத்தி ற்
சங்கந்தருமுத்தந்தந்திடுமேலென்றனையும ளி
யங்கந்தருவமிசைக்குஞ்சுனைக்கழைத்தேகணங்கே. (௭௨)

தகையணங்குறுத்தல்.

மருமலரோன்பணிகோடீச்சுரேசர்வரைவரு நீ
திருமகளோமதன்காதலியோவெங்கடேமொழி து
துருவுமிலையன்னள்புனலாடற்கேகினளுற்றிடுஞ்ச ற்
திருவிருமேவிவிளையாடலாமின்றிருவிருமே, (௭௩)

நடுங்கநாட்டம்.

ஆரூர்மழுவினர்கோடீச்சுரவெற்பிலாரணந் தே
பாரூர்வதுவோபறப்பதுவோவெஃபகையிடத்தி ற்
போரூர்செங்கோடுறுவன்கொடுங்குன்றம்புரையுமொ று
காரூர்கைம்மாக்கொளவேலெறிந்தாரொருகாவலனே. (௭௪)

தலைவன்பாங்கியையிரவுவலியுறுத்தல்.

கருதடியார்கட்குயர்வரநல்குங்கருணையின ர்
பருவரைவில்லினர்கோடீச்சுரவெற்பிற்பாங்கியெனு ந்
திருவிங்கிருக்கின்றனளிவட்போற்றினச்செல்வநல் கு
மருவினச்செல்வமுன்வேண்டின்பமெய்தும்வழியிதுவே. (௭௫)

பாங்கியையூர்வினாதல்.

மதியிருக்கும்வடிவாள்போலிருக்கும்வரிவிழியா ய்
நதியிருக்குஞ்சடைக்கோடீச்சுரேசர்நகத்துறுநி ன்
பதியிருக்குந்தலம்வானோபுவியோபகர்தியிங்கு க்
கதியிருக்குந்தலந்தேடிடுவேன்சென்றுகண்ணுறவே. (௭௬)

பெயர்வினாதல்.

கந்தனைத்தந்தவர்கோடீச்சுரவெற்பிற்கண்டவு னை
யிந்திரையென்றனன்யானெனதுள்ளமிரதியெ னு
மந்தரர்கோன்றுணையென்றார்சிலரிதையாய்ந்திடுவா ன்
வந்தனனின்பெயரிங்கெனக்கோதுகவாணுதலே. (௭௭)

மான்வினாதல்.

படிபுகழ்சீரினர்கோடீச்சுரத்தெம்பரமர்வெற்பி ன்
முடிமிசைவேட்டத்தினெய்திடுமென்கணைமுன்னர்த்தப்பி ப்
பிடியெனவோர்மானடந்ததுநானும்பிடிபிடியெ ன்
றடியுறவந்தனன்காணேன்கண்டாற்சொல்லணியிழையே. (௭௮)

வழிவினாதல்.

பெருவானவர்புகழ்கோடீச்சுரேசர்பிறங்கன்மின் னே
கருவாய்வனத்தைக்கடந்தெளியேனுட்களிப்பினொ டு
மருவாய்பொழில்சூழ்சிவபுரங்கூடும்வழியுன து
திருவாய்மலர்ந்திங்கிதுதானெனவொன்றுசெப்புகவே. (௭௯)

மொழிவினாதல்.

ஆலார்நிழலுறைகோடீச்சுரவள்ளலம்பொன்வெற்பி ன்
பாலாரிடத்திற்சிலர்திருவாய்மொழிப்பண்பறிந்தே ன்
சேலாம்வரிவிழியாயித்தலத்திற்செவியுண ர
மாலாமெனக்குன்றிருவாய்மொழியொன்றுவந்துரையே. (௮௰)

இவர்மனத்தெண்ணமியாதெனத்தேர்தல்.

வையுற்றசூற்படைக்கோடீச்சுரேசர்வரையிலிவ ர்
மையுற்றவேழம்பல்கேழலெய்தோமெனவன்மைசொல்வா ர்
கையுற்றதுதழைவாயுற்றதுபொய்கருத்துற்றது உ
மெய்யுற்றதூஉமறியேமெவரோவிந்தவித்தகரே. (௮௧)

எண்ணந்தெளிதல்.

குழைகாட்டுங்காதினர்கோடீச்சுரேசர்குவட்டிவிந் த
நுழைகாட்டிடையிவர்வில்லோடம்பின்றி நுழைந்துவந்தோ ர்
மழைகாட்டியமதமாவந்ததோவெனுமாற்றம்பொய்கை த்
தழைகாட்டிநங்குலமானைக்கொண்டேகிடச்சார்ந்தனரே. (௮௨)

இருவருமுளவழியொருமையிற்போதல்.

திறல்விடையூர்தியர்கோடீச்சுரேசர்திருவரு ளு
முறுமுனர்நாஞ்செய்தவப்பேறும்போலிங்கொருமுகிலி ற்
செறிபிருமின்போலரசியும்பாங்கியுஞ்சேர்ந்துறைந்தா ர்
குறுகிவின்மாரன்கொடுங்கோனடாத்துதல்கூறுவமே. (௮௩)

அவ்வகைகெடுதியுண்மனம்விறுதல்.

திங்கட்கொழுந்தணிகோடீச்சுரேசர்சிலம்படிக்க ட்
டங்கியவென்மனமாங்கொருகாலென்றனையறி யர்
தெங்குஞ்சரிக்குமுடன்மீண்டிடுமஞ்சியிப்பொழுதி ன்
டுங்கடம்பாலுற்றதோமங்கைமீருண்மைபோதுமினே. (௮௪)

ஒழிந்ததுவிறுதல்.

மாலோர்புறங்கொண்டகோடீச்சுரேசர்வரையிடை நீ
ராலோலமென்னுங்குரலேவழிமதித்தன்னமன்னீ ர்
பாலோடுங்கிள்ளைகளெல்லாம்வருவித்துப்பைந்தினையி ன்
மேலோங்கிடுகுரலெல்லாமினிதுவிருந்திடுமே. (௮௫)

பாங்கியெதிர்மொழிகொடுத்தல்.

மலையாயவில்லினர்கோடீச்சுரேசர்வரையிலுன்கை த்
தலையார்கணைக்கும்விழிக்குமனத்திற்குந்தப்பியெங் கு
நிலையாதிங்குற்றகலைகண்டிலேமையநீடுநின்போ ற்
கலையாய்வதற்குப்பொழுதுளதோபுனங்காப்பவர்க்கே. (௮௬)

இறைவனைநகுதல்.

இழைவளர்மார்பினர்கோடீச்சுரேசரிமவரைமே ற்
கழைமதன்போதுகொண்டெய்திடலோர்ந்திவர்கான்விலங்கைத்
தழையதினெய்திடவெய்தினரீண்டித்தழையதனு ண்
மழைமதவேழங்கயமாமுழையுமறிதருமே. (௮௭)

பாங்கிமதியினிலவரவர்மனக்கருத்துணர்தல்.

நிறக்குந்தினைகொண்டுகோடீச்சுரநித்தர்நீள்வரைக்கட்
பறக்குஞ்சுகமிவள்பாராளிவன்சுகம்பார்க்குமிவன்
மறக்குஞ்சரத்தைமறந்தின்னவள்விழியிவன்சரத்தை
யுறக்கண்ணுறுமிவர்வேட்டமுங்காப்புமுணர்வுற்றவே. (௮௮)

தலைவனுட்கோள்சாற்றல்.

சிற்றேரிடைபங்கர்கோடீச்சுரேசர்திருவருண்முன்
பெற்றேன்சிந்தாமணிவேண்டினுநீவிர்பெறக்கொடுப்பேன்
பொற்றேரினையச்சுறுத்தல்குலிசிங்குப்போதநம்பாற்
குற்றேவல்செய்யும்விருப்பினுற்றேனென்னுட்கோளிதுவே. [(௮௯)

பாங்கிகுலமுறைகிளத்தல்.

காரூர்களத்தரன்கோடீச்சுரமெனக்கற்றவர்சொல்
பேரூருனதிடஞ்சீறூரெமதிடம்பேருறநீ
பாரூர்முழுவதுங்காப்போனெங்காவலிப்பைம்புனநீ
கூரூர்படைமன்னனுங்குறமாதர்குறித்தருளே. (௯௰)

தலைவன்றலைவியையுயர்த்தல்.

நங்கேதந்தீர்த்தருள்கோடீச்சுரநம்பர்நாட்டினிடைச்
செங்கேழ்வண்டாமரைசேற்றெழுங்கள்ளியிற்சீர்கொளுஇ
லிங்கேயுதித்திடுமெங்கேயுதிக்கினென்னேதில்பொருள்
சங்கேயெனுங்களவுங்கள்பைம்பொன்னுமத்தன்மையளே (௯௧

பாங்கியறியாள்போன்றுவினாதல்.

நனையாடுதண்பொழிற்கோடீச்சுரநம்பர்நல்வரைமேற்
சுனையாடுநர்பலர்பந்தாடுநர்பலர்சூழ்ந்தெழிலம்
மனையாடுநர்பலரின்னருளிங்ஙனம்வாள்விழிகொண்
டுனையாடுவித்தவரார்மன்னவாவுண்மையோதுகவே. (௯௨)

தலைவனிறைவிதன்மையியம்பல்.

நாகமங்கத்திற்புனையும்புராணர்நவின்மறையார்
பாகமங்கைக்கருள்கோடீச்சுரத்தெய்பரமர்வெற்பில்
லாகமம்பொன்னுருக்காவியங்கண்ணிடையாய்மதனூல்
சோகமங்குற்றிடவென்னையிவ்வாறுசெய்தாமொழிக்கே. (௯௩)

பாங்கிதலைவியருமைசாற்றல்.

உன்னுமப்பொன்னிங்கெளிதினுறுதையவுன்றனக்குப்
பொன்னுமின்பந்தருந்தேருமரம்பெறுமோர்க்களிறு
மின்னும்பிறவுமெங்கோடீச்சுரேசரொழிற்றதத்தித்
பன்னுந்துதியும்பரிவுமுள்ளோர்க்குப்பலிப்பனவே. (௯௪)

தலைவன்றலைவியின்றியமையாமையியம்பல்.

முன்னரவ்வேதனுங்காணுமுடியினர்முத்தந கை
யின்னமர்பாகத்தர்கோடீச்சரமன்னவின்னுதலா ய்
கன்னற்சிறுவிலைதன்னான்மெலிந்திடிக்காலத்துங் க
ளன்னமில்லாவிடிற்சற்றுநில்லாதென்றனுருயிரே. (௧௫)

பாங்கிநின்குறைநீயேசென்றுரையென்றல்.

மின்னுறுதண்மதிக்காந்தமென்கல்லகமேவுமெ ழி
லுன்னுறுவண்ணமதிமுகங்காணினுருகுமன்றி ப்
பொன்னுறுகொன்றையர்கோடீச்சுரேசர்பொதியவெற் ப
வென்னுரையாலுருகாதேகிநீயேயிசைநினைவே. (௧௬)

தலைவன்பாங்கியைப்பழித்தல்.

மட்டார்மலர்ப்பொழிற்கோடீச்சரநித்தர்வண்சிலம்பி ற்
பெட்டாற்கரையேற்றெனவிரந்தோரைப்பெருகுவெள் ள
நட்டாற்றிடைவிடுவாரின்மின்னேநினைநம்பெனைக் கை
விட்டாயுன்வஞ்சியெனும்பேர்ப்பொருளைவிளக்கினையே. (௧௭

பாங்கிதலைவிபேதைமையூட்டல்.

தண்ணார்கடுக்கையர்கோடீச்சரவெற்பசாற்றுமெங்க ள்
பெண்ணாரமுதனையாண்மிகப்பேதைபெரிதுகந் து
கண்ணாடிநீழலொடுபேசுவாள்கையிற்பாவையை யூ
ட்டுண்ணுதவென்னென்பளெண்ணானுன்னுள்ளத்துறுதுய ரே.

தலைவன்றலைவிமூதறிவுடைமைமொழிதல். [(௧௮)

செங்கையந்நாளினர்கோடீச்சுரேசர்சிலம்பிடைத்த ன்
னங்கயற்கண்கொண்டெனக்குனைக்காட்டியனங்கனுக் கு
மிங்கயலின்னவன்போகவிடேலென்றிசைத்ததி ரு
மங்கையைப்பேதையென்றேதெவ்வாறுமடந்தையரே (௧௯)

பாங்கிமுன்னுறுபுணர்ச்சிமுறையுறக்கூறல்.

கொற்றவமுன்னிற்சமைவுற்றவன்னத்தைக்கொண்டிடி னு
முற்றிடதானென்னைகோடீச்சரவள்ளலோங்கருளா ன்
மற்றிருவாரமணிமுடியாதிமருவுமின்ப ம்
பெற்றிருப்போர்கட்குவேண்டிடுமோபின்பிறரருளே. (௨௰)

தன்னிலைதலைவன்சாற்றல்.

காதார்கயற்கண்ணிகோடீச்சரநம்பர்காசிநின்றி ப்
போதாரளகக்குமரியுற்றுடப்புகனெறிக்க ண்
ணீதாம்வடமலையாதிகளுக்குற்றுமேவினன்மு ன்
னீதானஞ்செய்திடினன்படிவேனச்சநெஞ்சிலற்றே. (௨௰௧)

பாங்கியுலகியலுரைத்தல்.

கார்கொண்டவாணவமாதிகணீக்கிக்கலந்திடன்பர் க்
கேர்கொண்டவின்பருள்கோடீச்சுரவள்ளலேமவெற் ப
வார்கொண்டபூவையுறுகன்னிகையையவளாவுபெ ற
நார்கொண்டிசைப்பதுமாலையதாமிந்தநன்னிலத்தே. (௱௨)

நீவரைகென்றல்.

வன்னிக்குழூல்னர்நமரோடேமருமகிழ்வுபெ ற
மன்னித்தலம்புகழ்கோவேதாரளமும்வச்சிரமு ம்.
பொன்னித்திரையெறிகோடீச்சுரநம்பர்பொற்சிலம்பி ன்
கன்னிப்பிடியைவரைந்தணைப்பாய்புயக்கம்பத்திலே. (௱௩)

தலைமகன்மறுத்தல்.

ஆவாவெனக்கையிளைத்தாற்றழுங்குமவளையொ ரு
நாவாய்செய்தேறிக்கொடுகளைவாவெனுநண்பவொத்தா ய்
தேவாதிபர்பணிகோடீச்சுரேசர்சிலம்பணங் கை
நீவாகுடன்வரைந்துன்மாலகற்றென்றுநேரிழையே. (௱௪)

பாங்கியச்சுறுத்தல்.

படமன்னுபூணினர்கோடீச்சுரவெற்பின்பாலெம்முன்னர் க்
கடன்மன்னுமாலிற்களித்துநில்லேலிதுகண்டனை ளோ
லடன்மன்னுமிக்குன்றவாணர்கடாமையுற்றையவு னை
விடமென்னவந்துவளைந்துகொள்வாரிந்தவேலையிலே. (௱௫)

தலைவன்கையுறைபுகழ்தல்.

மெய்யேந்துமிம்மணிகோடீச்சுரநித்தர்வெற்புறைவி ர்
மையேந்துவரியொளிநீள்கயிலைவரணைகம் பை
யையேந்திவற்றினிடையதிதன்பேரறையுமுன்னர் க்
கையேந்துவானிந்திரன்கொணர்ந்தேனுங்களுக்கெளிதே (௱௬)

பாங்கிகையுறைமறுத்தல்.

மேலோர்புகழ்பரன்கோடீச்சுரவள்ளல்வெற்புறை வோ
மேலோம்பிறரிடையாங்கொடுப்போமிவ்வெழின்மணித்தா ர்
வேலோடுவவுமரசேயுனக்காயிலைந்திடுநி ன்
பாலோர்க்களித்திடுதவுனைப்பாடியபாவலர்க்கே. (௱௭)

ஆற்ருநெஞ்சினேடவன்புலத்தல்.

மழைநிகர்கண்டத்தர்கோடீச்சுரேசர்வரையினெஞ் சே
யுழைநிகர்நோக்கியரோலாதுவாடென்கையொண்டளிரா த்
தழையுறுமுன்னர்க்குழையெனமேலவர்சீற்றினை ரோ
குழைவுறுகின்றதிதுநீகுழைவதென்கூறுகவே. (௱௮)

பாங்கிதலைவனையாற்றுவித்தகற்றல்.

ஒருவிடிப்போதிதுகாலமன்றெல்லையுதையத்து வா
மருவிடுன்மாலையைமன்னவன்றுடன்மனந்திருத் தி
திருவிகற்பத்தினர்கோடீச்சுரேசர்நெடுவரை மே
லருவியின்மாமுலைபீதுறவாக்குவளுமிதுவே. (௱௯)

கிழவோன்மடவேபொருளெனமதித்தல்.

பூவேறிஞனுமலையேறிஞனுமுன்போற்றிசைப்ப ச்
சேவேறிவந்தருள்கோடீச்சுரேசர்சிலம்பினி டை
நீவேறுகண்ணிக்கலையனெஞ்சேயிங்குநீமட ன்
மாவேறிமெள்ளப்பிடித்திடுவோமந்தவன்குயிலே. (௱௰)

உலகின்மேல்வைத்துரைத்தல்.

கோவார்நுதலினர்கோடீச்சுரவெற்பிற்கூறெளிதி ன்
மேவாமகளிர்கண்மேவுறுவானெஞ்சின்மேவுற்றுளோ ர்
பாவாயவர்கட்மாவணைத்துடிபனையையொ ரு
மாவாகச்செய்துநடத்துவரீதுமனுமுறையே. (௱௰௧)

அதனைத்தன்மேல்வைத்துச்சாற்றல்.

விடமுறுகண்டத்தர்கோடீச்சுரமன்னமின்னினையோ ர்
படமதிலீதென்னெழுத்தென்றெவரும்படுத்துரைக்க த்
திடமுறத்தீட்டிக்கரங்கொடுநாளைத்தெரித்தப னை
மடன்மிசைநம்மூர்த்தெருமேல்வருவேன்மதிநுதலே. (௱௰௨)

பாங்கிதலைமகளவலையவத்தருமைசாற்றல்.

விழியுறுபாலத்தர்கோடீச்சுரமன்னமின்றிருவா ய்
மொழியுறுகாஞ்சிதிகழுறுசீரங்கமுந்திவற் றை
யெழிலுறுமன்னவெழுதவையோவுய்த்தெழுதுவையே ற்
கிழியெனக்கண்டோருமாயாதெழுதக்கிழிதனையே. (௱௰௩)

தலைமகன்றன்னைத்தானேபுகழ்தல்

வண்ணவெண்ணீற்றரன்கோடீச்சுரவெற்பின்மாதராயோ ர்
விண்ணுக்குருவிலையென்பாரதுவுண்டுமேலதன் க
ணண்ணுஞ்சுனையுண்டதிலொருதாளிருநாண்முகையு ண்
டெண்ணிவைசொல்லன்றெழுதித்தருவனிங்கிவ்வண்ண மே.

பாங்கியருளியல்கிளத்தல். [(௱௰௪)

சூலாயுதத்தினர்கோடீச்சுரவெற்பிற்றேன்றிடு நீ
சேலாயகண்ணிபொருட்டினித்தாலஞ்சிலைதக்கிலித ன்
மேலாயவண்டம்பலம்பாம்பலவுயிர்வீதனு று
மாலாயவுன்னையுருத்திரனுமென்பர்மற்றயனே. (௱௰௫)

பாங்கிகொண்டுநிலைகூறல்.

ஒத்தேதநின்னல்லலெல்லாமிசைப்பேனெவ்வுலகினுக்கு ம்
வித்தேயெனும்புகழ்க்கோடீச்சுரநித்தர்வெற்பின்மலர் க்
கொத்தேதரியமுடிப்பொற்பேறிடுமென்கொடியிடை மே
வத்தேன்மறுத்திடினியம்மடலேறளியரசே. (௱௰௬)

தலைவியிளமைத்தன்மைபாங்கி தலைவற்குணர்த்தல்.

மழுத்தடங்கையினர்கோடீச்சுரர்வெற்பமற்றிவணீ
யெழுத்திசையாதுமுன்சொற்பொருள்கொள்ளாதியாப்பணியி
விழுத்தகவோதிமுடியாவிப்பேதைகண்மேவுதற்கென் [ன்
வழுத்துதிமென்மைத்தனமிலைக்கூடந்தித்திடினே. (௱௰௭)

தலைவன்றலைவிவருத்தியவண்ணமுரைத்தல்.

உம்பர்கள்போற்றிடுங்கோடீச்சுரேசர்தமோங்கலில் வே
ளம்பலரான்மெலிவேனைத்தனவரும்பாலும்வ வி
திம்பாலைத்திட்டதாலவ்விளங்கொடியேல்லையுறி ல்
வம்புசெயத்தக்கதேசிறிதேனும்வனமுலையே. (௱௰௮)

பாங்கிதலைவிசெவ்வியருமைசெப்பல்.

வழங்காரணன்பரன்கோடீச்சுரமன்னவஞ்சியென் றே
கழுங்காடிலவெழிற்பந்தாடிலைக்கலியறியே ன்
முழங்கார்கழன்மன்னவாவுன்னகவலக்கண்மொழிய த்
தொழுங்கால்விருத்தமுறும்பதமன்றிதுசொல்லுதற்கே. (௱௰௯

தலைவன்றலைவிசெவ்வியெளிமைசெப்பல்.

பார்கேட்டகீர்த்தியர்கோடீச்சுரேசர்பணிவரை யி
னீர்கேட்டவர்க்கருள்கார்தனைநோக்கினெடிதுவக் கு
மேர்கேட்டுவாங்கியவம்மயிலும்மயிலென்றனிய ற்
பேர்கேட்குமுன்னரனமேகளித்திங்குன்பின்வருமே. (௱௨௰)

பாங்கியென்னைமறைத்தபின்னெளிதெனநகுதல்.

நெய்யுந்திரியுந்தகளியுந்தீயுமுன்னேர்ந்துதம்மி ற்
செய்யுஞ்சுடராய்த்திகழ்வும்பின்றாண்டலுறுத்திற மு
மையகண்டென்னையெண்ணுதவளின்பத்தடைவெண்ணிறு ய்
வையம்புகழ்பரன்கோடீச்சுரவெற்பில்வாய்ப்பிதுவே. (௱௨௰௧)

அந்நகைபொறாதவன்புலம்பல்.

மங்கைநல்லாயெழிற்கோடீச்சுரநம்பர்மால்வரைமே ற்
றங்குறுவேண்மலராலெறிந்தானதுதண்புனத்தோ ர்
பைங்கிளிமேற்பட்டுருவியென்னெஞ்சினும்பட்டலைத் தீ
திங்குனக்கோதினனீநகையாலெறிந்தீர்ந்தனையே. (௱௨௰௨)

பாங்கிதலைவனைத்தேற்றல்.

மேலும்பர்போற்றரன்கோடீச்சுரவெற்பின்மேவுகைவி ற்
காலுறுகற்கடகச்சிங்கமேயந்தக்கன்னியுன்ற ன்
பாலுறச்செய்வேணிராசியமாகப்பருவரல்போ க்
கேலும்வகைமுயன்றுன்முடியாதென்னித்தலத்தே. (௱௨௩)

பாங்கிகையுறையேற்றல்.

நாதாந்தமேவான்கோடீச்சுரவெற்பினண்ணுமெங்க ள்
போதார்குழலிக்குன்கையுறையோதினன்போவிங்கென் ன
வாதாடவென்றுளினிப்போதுமென்றேயிங்குவந்தனன் யா
னீதாவுலகுக்குத்தாதாவெனச்சொன்னெடுந்தகையே. (௱௨௪)

தலைமகளுற்றல்.

பொன்மாலையன்புகழ்கோடீச்சுரநம்பர்போற்றிடுந ன்
சொன்மாலையன்புறக்கொள்ளுதல்போலிந்தத்தோகைம ணி
வின்மாலையன்னளுக்கேற்றனண்மீதுமெலிவுத ரு
வன்மாலையன்னதையாற்றிடுமாலையைமாற்றுவளே. (௱௨௫)

பாங்கியிறைவிக்கவன்குறையுணர்த்தல்.

சித்திரபானுசுபானுமதியெனுஞ்சீர்நயன ர்
சித்திரமாநகர்க்கோடீச்சுரவெற்பிற்றேர்ந்தயன்செ ய்
சித்திரமேயோர்சுகங்காண்கிலனுந்திகமொருவ ன்
சித்திரமாந்தழைகைவாடவாடித்திரிந்திடுமே. (௱௨௬)

தலைவியறியாள்போன்றுகுறியாள்கூறல்.

மன்றிடையாடல்செய்கோடீச்சுரேசர்மனத்தருள்கொ ண்
டன்றுறுபத்திரயோகிக்கறந்தவமாமெவை யு
மொன்றொருகோடியதாமித்தலத்திலுறைந்திடுங் கே
யென்றுரைத்தாரவனய்வாறிருந்தனனேந்திழையே. (௱௨௭)

பாங்கியிறையோற்கண்டமைபகர்தல்.

சைவாகமஞ்சொன்னகோடீச்சுரேசர்தடத்துநம் பர்
லவ்வாரணமுங்கலையுமுளையுடனன்றுகந் து
செவ்வாயினுயவரின்றேதுகேட்குந்திறத்தின ரோ
மைவாழ்பொழிலிடைவந்துநிற்கின்றனர்வாணுதலே. (௱௨௮)

தலைவிபாங்கியைமறைத்தல்.

விழியுறுபாலத்தர்கோடீச்சுரநம்பர்வெற்பணங் கே
வழிநடப்போரவ்வழிகேட்பர்தாமங்குவந்தவ ளை
மொழிவரினவைமற்றெனைக்குறித்தோவொன்றுமுன்னலை நீ
பழிதருமேநங்குலத்திலுக்கீதென்பகர்ந்தனையே. (௱௨௯)

பாங்கியென்னைமறைப்பதென்னெனத்தழாஅல்.

ஏறூர்கொடியரன்கோடீச்சுரமன்னவேந்திழைமெ ய்
வேறுவியொன்றுவிருந்தேமிருவருமேலது வு
மாறுகவெண்ணியின்றென்னோடுபுராணவசநம்விட்டு த்
தேறுமறைகூறுதிநமக்கீதுசிறந்ததன்றே. (௱௯௰)

பாங்கிகையுறைபுகழ்தல்.

மறியுறுகைபரன்கோடீச்சுரவெற்பின்மன்னர்தந் த
றுறியிதுன்காதிற்கணிகுழையாம்பின்னுமொய்குழற் கு
நறியதுவாய்மேவலங்கலுமாங்கைக்கொணர்கிளியா கு
சிறியமருங்கினுக்காடையுமாமிசைத்தேமொழியே. (௱௯௧)

தோழிகிழவோன்றுயர்நிலைகிளத்தல்.

மறவினைதீர்த்தருள்கோடீச்சுரேசர்வரையில்வெ யி
லுறவினைவுற்றிடுபேடையைத்தன்சிறையூடணைத் த
புறவினைநோக்கியகவினைதீர்ந்தப்புரவலர் நீ
ணறவினைமேவலர்க்கோதைநின்றூர்சொன்னலீவடைந்தே. [(௱௯௨)

பாங்கிமறுத்தற்கருமைகூறல்.

தையனல்லாய்சிவன்கோடீச்சுரவெற்பர்சார்ந்துநின ங்
கொய்யுந்தழைதந்தக்காவுமெலிந்ததுகொய்தவர்த ங்
கையுமெலிந்ததவர்க்கிசைவாம்பதங்கட்டுரைத்தெ ன்
பொய்யுமெலிந்ததுநானுமெலிந்துன்கட்போந்தனனே (௱௯௩

பாங்கிதலைவன்குறிப்புவேறாகநெறிப்படக்கூறல்.

சேய்தந்தநாட்டத்தர்கோடீச்சுரநித்தர்திண்சிலம்பி ற்
காய்தந்திடும்பனைமீதேறினல்லகனிதருமெ ன்
றோய்தந்தகோற்றொடியாங்கிசைத்தாரன்பரன்னவர்த ம்
வாய்தந்தசொல்லீதறியேனவர்தமனக்கருத்தே. (௱௯௪)

பாங்கிதலைவியைமுனிதல்.

மின்னையசெஞ்சடைக்கோடீச்சுரவள்ளல்வெற்புறந ம்
முன்னையந்தன்னைக்குறித்துரைத்தேனிம்மொழியன மே
பின்னையதுசென்றதோர்ந்திலனீயென்பிழைபொறுத் தி
டுன்னையமாதருக்கோதிடுநீடுன்னுளக்கருத்தே. (௱௯௫)

தலைவிபாங்கியைமுனிதல்.

அனத்துக்கிசையநடக்குமின்னேயின்றளியனுன்ற ன்
மனத்துக்கிசையநடந்திடவோவுன்மறுவறுந ம்
மினத்துக்கிசையநடந்திடவோசொல்லினத்துக்கெ க்
கனத்துக்கிசைகண்டர்கோடீச்சுரேசர்கதிர்வரைக்கே. (௱௯௬)

தலைவிபாங்கிகையுறையேற்றல்.

ஓணத்தவன்போற்றவிட்டத்தன்கேட்டையுருனடியா ர்
காணத்தகுபரன்கோமேச்சுரமன்னகாரிகை நா
ணுணத்தகுவதெனினுமறேனின்சொனல்லதி து
பூணத்தகுவதென்றுய்த்தருவாய்நின்கைப்பூந்தழையே. (௱௩௭)

தலைவிகையுறையேற்றமைபாங்கிதலைவற்குணர்த்தல்.

தன்னொத்திடுசிவன்கோமேச்சுரவெற்பசார்ந்தளித்தே ன்
முன்னொற்றியூர்வரிநாட்டத்திலோங்குமுதுகுன்ற மா
மென்னுந்தனத்தணைத்தொண்முல்லைவாய்முத்தமீந்தனள்பி ன்
மன்னத்தகையமயிலையொப்பாளுநன்றன்மாந்தழைக்கே (௱௩௮

பாங்கிதலைமகற்குக்குறியிடங்கூறல்.

ஆனியிலம்பலத்தாடிநல்லாவணியார்கொடியா ன்
கானியல்கொன்றையன்கோமேச்சுரமன்னகார்வரைக்க ண்
வானியல்காவொன்றதிலேசுகமுன்மருஉமது வே
தேனியல்கோதைவிளையாடிடமுந்திவாவதிலே. (௱௩௯)

பாங்கிகுறியிடத்திறைவியைக்கொண்டுசேறல்.

அலைகொளுமாவிநின்மெய்ம்மணங்கூடுறவாடிவெம் மூ
விலைகொளுஞ்சூலத்தர்கோமேச்சுரோசரிமையமென் னு
மலைகொளமென்சொற்பயிற்றிமற்றீண்டுவரவரு ஷி
சிலைகொளும்வாளிநிகர்விழிவாணுதற்சிற்றிடையே. (௱௪௰)

குறியிடத்துய்த்துநீங்கல்.

சேவலர்கேதனர்கோமேச்சுரவெற்பிற்சோரவு று
காவலர்தம்மைநின்றிங்குநின்கைக்கொள்கயத்தொண்கஞ்ச ப்
பூவலர்நீலமெலாமங்குநான்றனிப்போய்க்கொணர் கே
னேவலரின்றிமதனேங்கச்செய்குவமேற்றிழையே. (௱௪௧)

இறையோன்குறியிடத்தெதிர்ப்படுதல்.

திறமாரிவ்வேனிலிற்கோமேச்சுரோசர்சிலம்பிலென்மே ன்
மறமாரிகல்செய்மதன்றனையோட்டிமருவெனக்கு ன்
னிறமார்மணிமுடிவேய்ந்தரசீந்திடநீடுநினை ந்
துறமாதுநீயிவண்காணேவவந்ததின்றேங்கருளே. (௱௪௨)

புணர்ச்சியின்மகிழ்தல்.

பூனந்தநோக்கிமுன்னோமெய்தகத்துயர்வெப்பக ல
வானந்தமேவிமனவாசகத்துமதிப்பரிதாய் த்
தேனந்தமார்கொன்றைக்கோமேச்சுரோசர்சிலம்படி கு
ழானந்தவெள்ளத்திருவோமுங்கைகலந்தாடுவமே. (௱௪௩)

புகழ்தல்.

நதிவார்சடையரன்கோடீச்சுரவெற்பினல்லதி ன
மிதுவாகுநானிங்கணைந்துநின்பேரின்பமெய்தலுற்றே ன்
மதிவாணுதலாய்பொருந்துமுன்னத்தமருவலன்றி த்
திதிவாரயோககரணங்கண்மேலுந்திடமுற்றவே. (௱௪௪)

தலைவன்றலைவியைவிடுத்தல்.

வாங்கியமேருவிற்கோடீச்சுரநித்தர்மால்வரைநி ன்
றீங்கியலுற்றெனைக்காத்தனைமேலன்மென்னட ந்
தாங்கியன்மஞ்ஞையெனப்போயுனைக்காத்தருகிருக்கு ம்
பாங்கியர்கூட்டமெனுங்கூட்டிடையுறைபைங்கிளியே. (௱௪௫)

பாங்கிதலைவியைச்சார்ந்துகையுறைகாட்டல்.

திகைகொண்டவான்புகழ்க்கோடீச்சுரநித்தர்திண்சிலம்பி ற்
றொகைகொண்டகஞ்சமெற்காணுமுன்கண்ணீர்சொரிகின்றவு ம்
பகைகொண்டிலவெனமெய்வாடிநின்றவும்பற்றிலன்மு ன்
னகைகொண்டுநின்றவிதுகொண்டுவந்தனனன்னுதலே. (௱௪௬)

பாங்கிதலைவியைப்பாங்கிற்கூட்டல்.

தீந்தேமலர்ச்சடைக்கோடீச்சுரேசர்சிலம்பினின் று
போந்தேமணம்பெறுமாவியுற்றுடியிப்போதுகொண் டா
யேந்தேரிளமுலையாய்விளையாடற்கினிப்பொழிற் க
ணுந்தேடுமாதர்நமைத்தேடுமுன்னங்குநண்ணுவமே. (௱௪௭)

பாங்கிதலைவற்கோம்படைசாற்றல்.

சகத்திருத்தேரினர்கோடீச்சுரவெற்பசாற்றுமெங்க ளீ
சுகத்தின்பொருட்டுற்றுழன்றதெண்ணேலச்சுகத்துய ர
மிசத்தியங்காசெதிர்கண்டோர்க்கிவண்வைத்தெவ்வேலையுமுன்
னகத்திடப்பஞ்சரம்வைத்தினிக்காத்திடருள்புரிந்தே. (௱௪௮)

விருந்துவிலக்கல்.

ஆறுநின்மேலுறைகோடீச்சுரநம்பரம்பொன்வெற்பி ன்
பாறுறுகள்டலவாறுமவ்வாறெல்லைவந்தொளிரு ங்
காறுநிருந்துன்னல்செந்தேனொடுநற்கனிதருவே ன்
றேறுறுணர்மன்னவாகொண்டுறங்குபின்சென்றருளே. (௱௪௯)

விருந்திறைவிரும்பல்.

சமரவெஞ்சூலத்தர்கோடீச்சுரவெற்பிற்சாற்றுமன் பே
டமரருணவிற்றினைமாவுந்தேனுமளிப்பினொனி ற்
கமலையன்னீரொன்றவப்பலன்மேலிங்ஙன்கண்டல வோ
குமரக்கடவுள்குடிகொண்டவணிக்குறிஞ்சியிலே. (௱௫௰)

கிழத்திமாலையாம்பொழுதுகண்டிரங்கல்.

பொருந்திடமால்விடைக்கோடீச்சுரோசர்புகழ்க்கிரி மே
லருந்திறல்வேள்விடுமுல்லைமென்பூஞ்சரமாற்றலரா ட்
வருந்திடுவேற்குருநீடுமிச்செவ்வந்திமாலையினை த்
திருந்திழையீண்டுவரவிட்டதார்பின்னுஞ்செப்புகவே. (௱௫௧)

பாங்கிபுலம்பல்.

சேவுற்றுகைப்பவர்கோடீச்சுரோசர்சிலம்பின்மத ன்
மாவுற்றதன்னவன்றேருற்றதாங்கவன்வண்கவி கை
மேவுற்றதன்றோன்றனைவாவினைந்தெனவெங்குயி லோ
கூவுற்றதீண்டினியென்படுமோதனிக்கோற்றொடியே. (௱௫௨)

தலைவனீடத்தலைவிவருந்தல்.

கருமுத்தமாலையன்விண்ணோர்பணிந்துகலந்துவல பீ
வருமுத்தமாலையர்கோடிச்சுரோசர்வரையிலன் று
குருமுத்தமாலைபலகொடுத்தார்வந்துகூடியென க்
கொருமுத்தமாலையிப்போதுதந்தாலுயிருய்குவனே. (௱௫௩)

தலைவியைப்பாங்கிகழறல்.

வணந்தருவெய்யோன்முதலவர்போய்ப்போய்வருதல்கண் டு
மணந்தவரீண்டுத்தணந்தனரொன்னவருந்தலென் னீ
பணந்தருபூணினர்கோடீச்சுரநித்தர்பைம்பொன்வெற்பி ற்
றணந்தவர்மீண்டுமணந்திடுவார்மென்றளிரியலே. (௱௫௪)

தலைவிமுன்னிலைப்புறமொழிமொழிதல்.

அரியாரணன்முன்னடிமுடிகாண்டற்கரியவர் கா
விரியார்தடங்கரைக்கோடீச்சுரநித்தர்வெற்பிடத்தி ற்
றெரியாருமுற்றத்தெரிந்தாருமோதிற்றெளிவரல்லா ப்
பெரியார்க்குணர்த்தினுனைத்தவையாவும்பிழைபடுமே. (௱௫௫)

தலைவிபாங்கியொடுபகர்தல்.

நாணவொண்ணுகவிற்கோடீச்சுரோசர்நளிர்வரைமே ற்
காணவொண்ணாதுநல்லோர்தமைக்காணிற்கலந்திடன் பு
பூணவொண்ணாதன்புபூண்டாற்பிரிவுபொருந்தவொண் ணா
தேணவொண்ணாதப்பிரிவுறிருவிபின்னேந்திழையே. (௱௫௬)

தலைவியைப்பாங்கியச்சுறுத்தல்.

சேவையுகைப்பவர்கோடீச்சுரோசர்சிலம்பிலொ ரு
கோவையகம்வைத்துலாப்புறங்காட்டுதிகூறிதனு ட்
பாவைதினைக்குரலெலலாஞ்சுகங்கொடுபாறின வா
லேவைநிகர்விழியாயினிக்காப்புனக்கில்லிடமே. (௱௫௭)

நீங்கற்கருமைதலைவிநினைந்திரங்கல்.

நல்லார்புகழ்சிவன்கோடீச்சுரவெற்பினுன்முகன வ்
வில்லாருடனமக்காவியொன்றுகமெய்வேறுசெய்த ச்
சொல்லாருமெய்களுமாண்பெண்ணெனச்செய்துதோற்றவருட்
கல்லாகநம்முண்மலராகச்செய்ததென்கற்பனையே. (௱௫௮)

தலைவிக்கவன்வரல்பாங்கிசாற்றல்.

தூதாடுகொன்றையர்கோடீச்சுரேசர்சயிலமலர் க்
கோதாயுன்னன்பர்தந்தேரோதைகேளினிக்கூறுவதெ ன்
போதாமதன்கணையாருயிராற்றென்றல்புத்தமுதி ன்
மீதாமதிக்கதிருன்றனக்கோதிவ்வியனிலத்தே. (௱௫௯)

பாங்கிதலைவற்குச்சிறைப்புறமாகச்செறிப்பறிவுறுத்தல்.

தனத்தத்தைமானுக்குதவுகோடீச்சுரத்தானுவெற் பி
னினத்தத்தைகாளக்கணியார்மலர்வாயினுலெமர்க்கி த்
தினைத்தத்தையார்தினைகொய்கெனவோதினர்சேர்ந்தவழி ப்
புனத்தத்தையாற்றுவர்யாம்போதுநீர்சுகம்பூண்டிருமே (௱௬௰

முன்னிலைப்புறமொழிமொழிந்தறிவுறுத்தல்.

சிறந்தார்புகழ்சிவன்கோடீச்சுரவெற்பர்சென்றங்கெம் மை
மறந்தாலுநீவிர்மறவாதிரும்மின்மறக்கின்வ ரி
நிறந்தாங்கியவண்டுகாளளியாரொனுநீடுபெய ர்
திறந்தானுறுதிங்குநாங்கள்செல்வோந்தினைசென்மனைக் கே.

பாங்கிமுன்னின்றிற்செறிப்புணர்த்தல். [(௱௬௧)

திறந்தருவேங்கைதென்கோடீச்சுரநித்தர்நேரியின்வா ய்
திறந்ததுநோக்கியெமரீங்கடைந்துதினைகொய்தெம் மை
மறந்தருமிங்ஙன்வைக்கொண்டுதெனக்கொண்டுமன்னவெங் க
ளறந்தருமில்லில்வைக்கின்றனர்போதுமவர்வழியே. (௱௬௨)

பாங்கிமுன்னின்றுணர்த்தியேதம்படைசாற்றல்.

எங்கேதமன்பரிருக்கினுமாங்குற்றிசைக்குமவ ர்
வெங்கேதந்தீர்த்தருள்கோடீச்சுரேசர்வியன்சிலம் ப
விங்கேதங்காமற்றினைக்கதிரோடில்லமெய்துதும் யா
மங்கேதமறிகர்கூந்தலைக்காக்கவணைந்தருளே. (௱௬௩)

தலைவன்றஞ்சம்பெறுதுநெஞ்சொடுகிளத்தல்.

நீளாசுகச்செயுங்கோடீச்சுரநம்பர்நேரிநல்லா ர்
கேளாசுகவெள்ளத்துற்றழைத்தேகக்கிளர்மனைப்போ ய்
வாளாசுக்முறவைகுவராண்டிங்குவந்தமர்செ ய்
வேளாசுகத்தைநெஞ்சேயினியாவர்விலக்குவரோ. (௱௬௪)

இறைவனைப்பாங்கிகுறிவரல்விலக்கல்.

பொன்போலுமெய்யினர்கோடீச்சுரேசர்புகழ்வரைக்க ண்
முன்போலடிக்கடிவாரல்வெற்பாவிம்முதிர்புனத் தி
லன்போடிளங்கன்றிடைப்புனிற்றுவெனவன்னையொளி ர்
மின்போனுடங்கிடைதன்பால்வருமெந்தவேலையுமே (௱௬௫)

இறைவியைப்பாங்கிகுறிவரல்விலக்கல்

உலகந்தருசிவன்கோடீச்சுரமன்னவொண்ணுதலு ன்
றிலகமுங்கூந்தலம்போதுமெய்ச்செவ்வியுஞ்சேரக்கண் டு
நலகங்கறுத்துநகைத்துயிர்த்தேதிகைணம்மனையி ன்
றிலகந்தருமிவ்விடமவ்விடமாமினிநமக்கே. (௱௬௬)

தலைவியாடிடநோக்கியழிதல்.

மறக்கதிர்ச்சூலத்தர்கோடீச்சுரேசர்வரைநெருந ற்
றிறக்கிள்ளைகள்புனம்வாராதகற்றினஞ்சேரவின் று
நிறக்கிளர்பூஞ்சுனைதன்றேடிச்சோலைநிழலும்விட்டு ப்
பறக்கின்றனஞ்சிறைகொண்டங்கத்திங்குபலித்திட்ட தே.

பாங்கியாடிடம்விடுத்துக்கொண்டகறல். (௱௬௭)

இழைநோக்குமார்பரன்கோடீச்சுரவெற்பில்யாமிழைத் த
பிழைநோக்கடாதெழிற்பைங்கிளிகாளெம்பிரிவுவந் து
முழைநோக்கிறைக்கிசைத்தோதியூர்வழியூரவர்க ண்
மழைநோக்கியெகுமெனவுண்மையோதிவரவிடுமே(௱௬௮)

இறைவன்குறிவயிற்சென்றிரங்கல்·

குழையார்செவியினர்கோடீச்சுரேசர்குவட்டிடைய வ்
வுழையார்விழியைக்காண்கிலமூர்வழியோர்ந்திலந ந்
துழையார்வங்கொண்டங்ககன்றாரிருந்தனந்தன்னின்மன்றே
ரிழையாயிருந்தனமென்றாலவருடனேகுவமே. (௱௬௯)

வறுங்களநாடிமறுகல்.

மந்தாகினிச்சடைக்கோடீச்சுரேசர்வரைத்திருமா ன்
வந்தார்வத்தோடம்மனையாடுமோகைவளையொலிக்க ப்
பந்தாடுமோசுகம்புள்ளினங்காளிந்தப்பைம்பொழிற்க ட்
டந்தாளுமோவொருகாலமுன்போலத்தமியனையே. (௱௭௰)

வாழுமூர்நோக்கிமதிமயங்கல்.

பெருவிண்ணவர்புகழ்கோடீச்சுரேசர்பிறங்கலின ந்
திருவின்புறமூரஃதசீறூரதிற்செறி வோ
ரிருவின்மறவர்நரேன்போலநாமுமவ்விந்திரன் பா
[illegible]ருவிஞ்சைபெற்றிடிற்போய்வரலாமந்தவூர்தனக் கே

இறையோனிருட்குறிவேண்டல்.

வனந்தங்குவார்சடைக்கோடீச்சுரேசர்மணிவரைவ ண்
டினந்தங்குகோதைநின்சீறூரிடத்தின்றிரவுதனி ற்
கனந்தங்குகாவின்முனேநாளெனக்கிருகைந்நிறைய த்
தனந்தந்தவர்தம்பிடைவருவேனின்றுந்தான்பெறவே(௱௭௨)

பாங்கிநெறியினதருமைகூறல்.

நெடுங்கயிலாயத்தர்கோடீச்சுரநித்தர்தேரியின்பா ற்
கொடுங்குன்றுநீடுவரரானைக்காவுங்குறிப்பின்ம ன
நடுங்குமிகுபுனற்கொள்ளிடவாறுமிந்நாளிர வி
லடுங்கதிர்வேலகடந்தீண்டணைதலருமையதே. (௱௭௩)

தலைவனெறியினதெளிமைகூறல்.

ஒளியார்செம்மேனியர்கோடீச்சுரேசருயர்வரைமே ற்
றெளியாரமுதந்தருகாரிகைமுகத்திங்களு ரு
வெளியாயுறும்போதிருளெனக்கேதன்றிமேலுமந்த க்
களியார்மயின்முற்பணிதொன்றலேதுகனங்குழையே(௱௭௪)

பாங்கியவனாட்டணியியல்வினாதல்.

நீடும்புகழரன்கோடீச்சுரவெற்பநேருன து
நாடுமந்நாட்டுநறுநுதற்பாவையர்நாணுமி ணி
தாடுமமுதத்தின்சீருந்தளைசெய்தணிதொடையு ம்
பாடுமப்பாவும்பயிலுமினமும்பணித்தருளே. (௱௭௫)

தலைவனவனாட்டணியியல்வினாதல்.

என்னாட்டணிநோக்கிடநீவருங்காலியம்புவன்மு ன்
னின்னாட்டியலிசைநாடகமாடுநீயெனக்கு ப்
பொன்னாட்டினர்பணிகோடீச்சுரநம்பர்பொற்கிரிமே ல்
வன்னாட்டியதன்னகொங்கைமின்னேரிடைவாணுதலே(௱௭௬

தன்னாட்டணியியல்பாங்கிசாற்றல்.

மாதாரமார்பங்கர்கோடீச்சுரேசர்வரையிட மே
யாதாரமாகவிருந்தாடுவார்மயிலாடுது றை
காதாரம்பாமெனுங்கண்ணார்மகளிர்தென்காஞ்சியொ டு
கேதாரம்பாடுவொங்கள்பொன்னாட்டினுங்கேளர சே.

பாங்கியிறைவிக்கிறையோன்குறையறிவுறுத்தல்[(௱௭௭)

வெவ்வாண்மழுப்படைக்கோடீச்சுரவள்ளல்வெற்பின்வ ரி
கவ்வாணம்பாடுங்குழலாய்மதியின்கலையமு தை
யவ்வாதரங்கொள்சகோரமுண்காலத்தரசருண்பா ற்
செவ்வாய்க்கிழமையமுதுக்குத்தாம்வரல்செப்பினரோ(௱௭௮)

நேராதிறைவிநெஞ்சொடுகிளத்தல்.

தோட்டுவிற்காதரன்கோடீச்சுரவெற்பிற்றேன்றியசெ ங்
கோட்டுயர்வேழத்தெதிர்நமைக்காத்தவர்கூடிவ ரி
பாட்டுளர்கானத்திராவரச்செய்தனள்பம்பரத் தை
யாட்டுவிக்குந்தனத்தாணெஞ்சமேயின்னதாய்ந்தில ளே. [(௱௭௯)

தலைவிபாங்கியோடுநேர்ந்துரைத்தல்.

மூன்றுணமக்குயிராவியிலீந்தமுதல்வர்வந்தி ங்
கென்றுருயிர்காத்திடுதியென்றுலதற்கென்செயலா ம்
வின்றுண்பணிகொண்டகோடீச்சுரவள்ளல்வெற்பிடத் தி
லுன்றுவகத்திற்கிசைந்ததைநீயேயுரையணங்கே. (௱௮௰)

நேர்ந்தமைபாங்கிநெடுந்தகைக்குரைத்தல்.

திகையுலவும்புகழ்க்கோடீச்சுரநம்பர்திண்சிலம்பி ற்
றகையுறுமாதுளமென்காய்தனைப்பகர்தந்திரந் தா
னகையுறுவேலமெலக்கனியாக்கினளன்பணிந் து
தொகையிதுவாமேல்வகையும்விரியுந்தொடர்ந்துண ரே. [(௱௮௧)

குறியிடைநிறீஇத்தாய்துயிலறிதல்.

இலங்கையிற்காவையனுமானழித்ததெனத்திருக் கை
யிலங்கையிற்சூலத்தர்கோடீச்சுரேசரிமையவெற் பி
னிலங்கையின்வீழிமானேநஞ்சோலையையீட்ழித் த
திலங்கையிற்போகவுஞ்செய்திட்டதாலையொன்றின்றுவந்தே [(௱௮௨)

இறைவிக்கிறைவன்வரவறிவுறுத்தல்.

முடிவனைகொன்றையர்கோடீச்சுரேசர்முருகுவெற் பி
னடிவளரேனற்புனத்தேபகல்வந்தவம்மத மா
கொடிவளர்காவினிடைவந்துதன்னொடுகூடவந் த
பிடிவரவேனைக்கிநிற்கின்றதுவாணுதற்பெண்ணரசே. (௱௮௩)

குறியிடத்திறைவியைக்கொண்டுசேறல்

ஆடகவில்லினர்கோடீச்சுரேசருண்மருவி ச்
சூடகக்காந்தளஞ்செங்கையின்னேமுகில்சூழ்பொழில் சூ
ழேடகமார்திருப்பூவணம்பார்த்திறைகூடலுங்க ண்
டீடகமேவுதிவாராய்சிவநிசியின்னதிலே. (௱௮௪)

குறியிடத்துய்த்துநீங்கல்.

பணிங்கொண்டபூணினர்கோடீச்சுரமன்னபாவையிரு ள்
வுணங்கொண்டகோதைக்கணிசெயநான்மென்மலர்பறித்துக்
கணங்கொண்டவைவலிக்காவகத்தேநில்கருதிடுந ன்
மணங்கொண்டுலாவுறுதென்றலுன்மேனிமருவுறவே. (௱௮௫)

தலைவனெதிர்ப்படுதல்.

ஊர்திறலேற்றனர்கோடீச்சுரவெற்பிலோதுவ ரீ
நேர்திறம்பாடுமைக்கோதைநல்லாயிந்நிசியில்வெய்யோ ன்
சீர்திறம்பாத்தன்கரத்தரலடைத்திட்டதிண்மனைய ந்
கார்திறந்தார்வந்தெவ்வாறுவந்தாய்தனியாருயிரே. (௱அசு)

தலைவியாற்றினதருமைநினைந்திரங்கல்.

வில்லரிமேருவெனமேல்வளைத்தவர்வில்வநா று
வல்லரிசூடியகோடீச்சுரேசர்வரைக்குறவ ர்
கொல்லரிகுத்தெனச்சூழ்ந்திடுங்கானிடைக்கொற்றவ நீ
யல்லரிவேழம்பிழைத்தீண்டணைந்ததருமையதே. (௱அஎ)

தலைவன்றேற்றல்.

சினத்திரிசூலத்தர்கோடீச்சுரேசர்திருப்பதமெ ன்
மனத்துறலாலெதிர்தோன்றுமடங்கன்மடங்கிய து
வனத்திற்கரியுங்கரிந்ததுதீங்கின்றிவந்தனன் யா
னினத்திகழ்பொற்றொடிக்கையாயொளிமுன்னிருளில்லையே.

புணர்தல். [(௱அஅ)

தெள்ளக்கலைச்சடைக்கோடீச்சுரேசர்சிலம்பிடையெ ன்
னுள்ளக்கமலத்துறைதிருவேயிவ்வுலகஞ்சுற்று ம்
வெள்ளக்கடற்குக்கரையுண்டளவுண்டுமேவுமிந்த க்
கள்ளக்களிப்பெருங்காமக்கடற்கவைகண்டிலனே. (௱அகூ)

புகழ்தல்.

வெண்பொடிப்பூசத்தராதிரையார்மகமேலழித்தோ ர்
பெண்புணரத்தத்தர்கோடீச்சுரத்திந்தப்பெண்ணிகர் யா
ரெண்பயிலுகமடந்தையர்தாழ்ந்தவரோத்திமையோ ர்
நண்புறுமாதர்களந்தரத்தோர்மண்ணினண்ணிலரே. (௱கூ௰)

இறைவியிறைவனைக்குறியரல்விலக்கல்.

உள்ளன்புணர்ந்தருள்கோடீச்சுரேசர்தமோங்கலன் ப
கள்ளம்பெரிதுகராம்பெரிதாற்றிற்கவலைநெ றி
வள்ளம்புதார்ப்பர்வனசரர்நீதனிவாரல்வ ரு
வெள்ளங்கிணற்றுப்புனல்கொண்டுபோதலின்மேதினிக் கே.

தலைவன்றலைவியையில்வயின்விடுத்தல். [(௱கூக)

எனையாளவந்ததிருவேதனிநில்லலேதில்வண்ட ர்
பனையார்கள்ளுண்டுகளித்துத்திரியும்பைம்பொழிற்க ண்
வனையாறுசடைக்கோடீச்சுரவள்ளல்வண்சிலம் பி
லனையாங்குநின்றனைத்தேடுமுன்னேகிடலாமனைக்கே (௱கூஉ)

பாங்கிதலைவியையெய்திக்கையுறைகாட்டல்.

சலந்தரற்காய்ந்தவர்கோடீச்சுரேசர்தடஞ்சிலம்பி ன்
வலந்தருவேல்விழிமானேதளவமலர்கொணர்ந் தே
னலந்தருமீதுன்னகையெழிற்கொக்கிமுன்றுணைமுற் று
மலர்ந்திடல்போலுள்ளுடைந்தாங்குநின்றதுவாய்திறந் தே. [(௱கங)

பாங்கிதலைமகளையிற்கொண்டேகல்.

தாய்துயினீங்கினென்றுயெங்கெனுமதுதானுமன் றி
வாய்துணைவாரியடைப்பினுங்கூவிடவாயிலைந ம்
மேய்துதிகொண்டருள்கோடீச்சுரேசரிமையவெற் பி
லாய்துடிநேரிடையாயொல்லைவாபின்னகந்தனக்கே. (௱கச)

பாங்கியிறைவனைவரவுவிலக்கல்.

மாயாவினேதர்தென்கோடீச்சுரேசர்வரையிறை வ
சாயாவனமுங்கழிப்பாலையுந்தள்ளிச்சாரினுமி த்
தீயார்குறிஞ்சியிற்சாரவொண்ணாதுதெரிக்குமி வை
யாயர்திரவில்வரினீயெனக்காமருப்பழியே. (௱கரு)

தலைமகன்மயங்கல்.

காவென்றுரைக்குமுன்வாவென்றழைத்துக்கதியருளு ந்
தேவென்றுளசிவன்கோடீச்சுரவள்ளல்செஞ்சிலம்பி ற்
போவென்பதேபுகலின்றொருபுயல்போற்றதன்மே ற்
றுவெண்மதிக்கதிரன்றுள்சுகநாஞ்சகோரமதே. (௱கசு)

தோழிதலைமகடுயர்கிளந்துவிடுத்தல்.

அரவிடையிசர்தென்கோடீச்சரவெற்பவண்ணுறுமி வ்
விரவிடைவிண்ணென்றொலிகேளாமகிழ்மயிலென்னவெம் மா
னிரலருங்கான்கடந்துன்னூரணைந்தபின்னீகுறிக் கு
மிரலைதன்வாயொலிகேட்டபின்றன்களிப்பெய்துவதே. ௱கஎ

திருமகட்புணர்ந்தவன்சேறல்.

பொன்னுறழ்மெய்யரன்கோடீச்சுரமன்னபூங்கொடி த
னுன்னுமிடையல்குலாதரநேரொமையோதுவெ ன
மின்னுமரவுமதியுமங்கங்குவெளியுறவெ ன்
முன்னுறவெய்திநெறிகாட்டநான்செல்வன்மொய்குழலே. ௱கஅ

இறைவிக்கிகுளையிறைவரவுணர்த்தல்.

இலகம்புனைசடைக்கோடீச்சுரவள்ளலேமவெற்பி ற்
கலகம்புரிவடிவேல்விழியாய்நந்தங்காவினி டை
யுலகம்புரக்குமுன்மேகமிவந்தெய்தியதோதலு று
நலகம்பலைசெவிக்கேட்கலுற்றேனிங்குநண்ணலுற்றே. (௱கக

தான்குறிமருண்டமைதலைவியவட்குணர்த்தல்.

வெள்ளங்கொள்வேணியர்கோடீச்சுரவன்பர்மேவுறச்செ ய்
கள்ளங்கொளோதையெனவேற்றொலியினைக்காவடைந்தே ன்
கிள்ளையினங்கள்சுகமாயிருந்தனகேகயமெ ன்
னுள்ளமருளமுற்றேகையதாயங்குறைவுற்றதே. (௨௱)

பாங்கிதலைவன்றீங்கெடுத்தியம்பல்.

கார்மேவியகண்டர்கோடீச்சுரவன்பர்காவினி டை
வார்மேவியகொங்கைநீபோயடிக்கடிமாழ்கிவ ரு
நீர்மேலெழுதிவைத்தேகினராகுநினைகுறி யை
யார்மேலறியவல்லாரவர்மாயமுமார்வமுமே. (௨௱௧)

தலைவன்புலந்துபோதல்.

மின்செயுஞ்சூலத்தர்கோடீச்சுரநம்பர்வெற்பிலி னி
யென்செய்வமென்னவிரங்குநெஞ்சேயிவ்விடையிரவி ற்
றென்செயம்போருகச்செந்தேனமக்குத்தெரிவுறு மோ
நின்செய்கையானுமலைத்தேனலைத்தாய்நெடிதெனையே. (௨௱௨)

புலர்ந்தபின்றலைவிவருங்களங்கண்டிரங்கல்.

பொன்னாகமால்புகழ்சோடீசுரேசர்புகார்த்துறைவாய் ப்
புன்னாகமேவியபுள்ளினங்காளன்பர்புல்லிரவி ன்
முன்னாகவிங்குற்றனரோவெனக்குமொழிமினின்றி ப்
பின்னாகமேவிலவர்க்குளைப்பொன்பெருந்துயரே. (௨௱௩)

தலைவிபாங்கிக்குணர்த்தல்.

தெய்யார்மழுவினர்கோடீச்சுரவெற்பர்தென்னல்வ ரை
பொய்யாரெனப்பொருண்மாறுகொண்டேனவர்போற்றிடுமின்
றுய்யானமெய்துவனென்றுசொன்மாறுரைத்துற்றவப்பே ர்
மெய்யாயுடன்படச்செய்துகொண்டார்மதிமெல்லியலே. (௨௱௪)

தலைமகளவலம்பாங்கிதணித்தல்.

தகரக்குழல்பங்கர்கோடீச்சுரநம்பர்சயியநெடு ஞ்
சிகரத்துதித்தநதியின்பின்னேகியதேமல ரை
வகரமுன்மேவுங்குளத்திடைநோக்கினன்வண்பொழிற்க ட்
பகரணியார்முலைமாதேதவிர்நின்பருவரலே. (௨௱௫)

இறைவன்மேற்பாங்கிகுறிபிழைப்பேற்றல்.

தாரார்கடுக்கையர்கோடீச்சுரேசர்தடஞ்சிலம்பி ற்
கூரார்மணிவேற்கரத்திர்நெருநற்குறியிடத் து
வாராதிருந்திருமதார்க்குநாங்கள்வரக்குறித் தே
மோரார்பெயருறும்பேரும்விள்ளாமையினுற்றிலமே. (௨௱௬)

இறைவிமேலிறைவன்குறிபிழைப்பேற்றல்.

என்னைமுன்னாண்டருள்கோடீச்சுரவள்ளலேமவெற்பின்
மின்னையன்னாள்வடிவென்றுங்குயிலிசைமேவுமென்சொற்
றன்னையன்னாண்மொழியென்றுமற்றங்கங்குச்சார்ந்திட்டுங்கள்
பொன்னையிரும்பொழிற்காண்கிலனார்சென்றுபோந்தனனே.

தலைவிகுறிமருண்டமைபாங்கிதலைவற்குரைத்தல். [(௨௱௭)

நீலுண்டகண்டத்தர்கோடீச்சுரேசர்நெடுஞ்சிலம்பி
னேனலும்புளினஞ்சிலம்பினுந்தாருவிழைந்திடினு
மேலுங்குறிவேற்றுமையறியாள்சென்றுமீண்டுபின்போய்க்
காலுஞ்சிவந்திட்டதல்வழிக்காவலகன்னிகைக்கே. (௨௱௮)

அவன்மொழிக்கொடுமைபாங்கியவட்குரைத்தல்.

கங்கைச்சடையினர்கோடீச்சுரேசர்கயிலையிலச
சங்கைக்கிடமிலென்சங்கேதந்தேருந்தகையற்றிந்த
மங்கைப்பருவமுதலாயதுங்கண்மடவாற்கென்
றங்கைத்தலத்தொளிர்வேலர்சொன்னார்வந்தணியிழையே.

என்பிழைப்பன்றென்றிறைவிநோதல். [(௨௱௯)

மறக்குஞ்சரமுரிகோடீச்சுரேசர்வரையளிகள்
பறக்குமிசையுஞ்சருகோடலருதிர்பாட்டியலு
முறக்குற்றிடாதிருந்தொண்பொழில்வாய்க்கேட்டுரைக்குமவர்
சிறக்குங்குறியென்றலைந்தேனிருளிடைத்தேமொழியே (௨௱௰)

தாய்துஞ்சாமை.

வணங்கார்புரம்வென்றகோடீச்சுரேசனைவாழ்த்தியினி
திணங்காகுமிந்தப்பிறப்பிடையேபண்ணிசைவரியின்
கணங்காமுறுகருங்கூந்தன்மின்னேயன்னைகண்ணிமையா
தணங்காயினளிரவெல்லாந்தனியேயணங்குறவே. (௨௱௰௧)

நாய்துஞ்சாமை.

வீயுறங்கும்பொழிற்கோடீச்சுரநம்பிமலர்வெற்பிற்
பேயுறங்காதங்கதனுடன்றாய்துயில்பெற்றிடினும்
நாயுறங்காதன்னதன்கணுறங்கினுநாடுமதன்
வாயுறங்காதிவற்றண்ணலெவ்வாறுவருமிரவே. (௨௱௰௨)

ஊர்துஞ்சாமை.

மருக்கொண்டகொன்றையர்சோடீச்சுரேசர்வரையிடத்திற்
குருக்கொண்டவொண்டொடிப்பைங்கிளியேயென்கொடுமையி
கருக்கொண்டுநீடுவிழாவொடுகூத்துக்கதைகளென [ருட்
வுருக்கொண்டுவந்திந்தவூருறங்காமலுஞற்றியதே. (௨௱௰௩)

காவலர்கடுகுதல்.

நாவலர்போற்றிடுங்கோடீச்சுரேசர்நளிர்வரைக்
ணேவலரான்மதன்றூக்கமெய்வாடுநம்மேந்தலுக்
மேவலராகித்துடியடித்தார்த்துவிடிவளவு
காவலர்சூழலின்வாராணிச்சூழலிற்காலனுமே. (உ௱௰௪)

க
கு
ங்

நிலவுவெளிப்படவருந்தல்.

சுரும்பார்மலர்ச்சடைக்கோடீச்சுரேசர்சுடர்க்கிரி
லரும்பாரூலைக்கொடியன்பரொன்பாலவந்தகலளவு
வரும்பாழ்மதியைப்புதைத்தாங்குவைத்திடவல்லவரா
கரும்பாந்தளொன்றுளதந்தவெட்டுண்டதைக்கண்டிலனே. (உ௱௰௫)

மே
ம்
ர்

கூழைகுழறுதல்.

மூண்டருவேலவர்க்கியல்கவ்வரியின்மொழியவ
மிண்டுடன்முன்னதற்கஞ்சாரூடொன்பதிறைதல்வெண்ணெய்
திரண்டுறுவேலையிற்றூழிச்சிதைவொக்குஞ்செய்ந்நகை
லரண்டுகளாக்கிறைகோடீச்சுரமன்னவாயிழையே. (உ௱௰௬)

ரு
யா

கோழிகுரற்காட்டுதல்.

வடியேர்கொள்வேலொடுசேய்போலிறைவர்வருதல்கண்
கொடியேனிவ்வூரிடையுள்ளேனென்கின்றதுகோழியிந்த
படியேயெனக்கிகலாயிங்கிருவெனப்பன்னிச்செல்வா
துடியேரிடையவர்கோடீச்சுரநம்பர்தூய்வரைக்கே. (உ௱௰௭)

டு
ப்
ர்

பாங்கிதலைவியைப்பருவரல்வினாதல்.

மகஞ்செயுமோமப்புகைபோய்விசும்பின்மழைபெய்வித்து
சகஞ்சலியாமற்செய்கோடீச்சுரவள்ளல்சாரலினு
னகஞ்சலிப்புற்றதென்றொன்னவோதினரன்னதைநி
முகஞ்சிறிதோதிற்றுநீசிறிதோதுமுகிழ்முலையே. (உ௱௰௮)

க்
ன்
ன்

தலைவியருமறைசெவிலியறிந்தமைகூறல்.

கயலையும்வேலையுநேர்விழியரன்னைகாவுட
வயலையுஞ்சூழநங்கோடீச்சுரநம்பர்மால்வரையெ
செயலையுநீர்கொண்டசேலையுமாகத்திலைத்தெழுந்
பயலையும்பார்த்தெவனென்றுண்மிகவும்பயந்தனனே (உ௱௰௯)

னே
ன்
த

தலைவிதலைவன்வருந்தொழிற்கருமைசாற்றல்.

கொங்கலர்க்கோதைநங்கோடீச்சுரேசர்குவட்டினிடை
திங்களோரம்புலிகோழியோர்வாரணஞ்சேண்பொழிலி
றங்குங்குடிஞையோர்கோட்டானிசைத்திஞ்சாரிவற்
யெங்குக்கடந்தன்பரெவ்வாறணைகுவரிவ்விடத்தே. (உ௱உ௰)

த்
ற்
றை

தலைவிதலைமகனூர்க்குச்செலவொருப்படுதல்.

மேணூர்மதிச்சடைக்கோடீச்சுரவள்ளல்வெற்பதொன்றன்
மாணூர்மனத்தினைக்கொண்டகன்றூரதைவாங்கிவரக்
காணூர்தருகின்றதுசெல்லுவோமெனிற்கண்ணுதல்வாழ்
நாணூரொன்ணூமொன்றணங்கேயவர்முன்னவின்றனரோ (௨௱௨௧)

பாங்கியிறைவனைப்பழித்தல்.

சீரலர்செங்கையிற்சென்னியுந்தாண்மேற்றெரிக்குமெழி
லோரலர்க்கண்ணுங்கொள்கோடீச்சுரவள்ளலோங்கலினும்
வாரலர்க்கோதைவளரவொன்றெண்ணியமன்னரிங்குச்
சேரலரானதிற்கைதவராவர்தெளிவுறினே. (௨௱௨௨)

இறைவனைத்தலைவியியற்படமொழிதல்.

தாயாயுலகிற்குத்தந்தையுமாயருள்சங்கரர்செவ்
வாயார்மறையினர்கோடீச்சுரமன்னமாதிறைவர்.
தீயாரொன்றேறிடலோராதவரல்லர்தெண்மதியா
ராயாதிருப்பதெளியேன்றுயரொன்னருவினையே. (௨௱௨௩)

தலைவிகனவுநலிவுரைத்தல்.

பெண்ணுறுபாகத்தர்கோடீச்சுரவெற்பர்பேசிரவி
னண்ணியுரம்பெறுதாளங்கைக்கொண்டுநகைமுகமுற்
றுண்ணயப்பெய்துறவாடிடவாவெனவோதினர்நான்
கண்ணைவிழித்தங்கெழுந்தேனவர்தமைக்கண்டிலனே. (௨௱௨௪)

தலைவிகவினழிவுரைத்தல்.

நங்காய்நங்காவலரூரினிலாத்திறநன்கறிந்து
கொங்காளும்வேடன்படைதனியேன்பொற்குவைகளேலா
மிங்காவலினுற்றுச்சூறையிட்டோடிற்றிமையமங்கை
பங்காளரங்கணர்கோடீச்சுரேசர்பணிவரைக்கே. (௨௱௨௫)

தன்றுயர்தலைவற்குணர்த்தல்வேண்டல்

அங்காவியங்கண்ணிகோடீச்சுரவள்ளலன்பர்முன்போ
யெங்காரிகைபொன்னிறமேற்றுமாலாயினளென்வே
யங்காதரத்தினுரைத்தோனெக்கென்றனருயிர்நீந்
திங்காய்த்தனக்கொருபெண்ணீந்துயர்புகழேற்பவரோ (௨௱௨௬)

நின்குறைநீயேசென்றுரையென்றல்.

விரையேயிதழியுமத்தமுஞ்சூழுறுவேணியினர்
பரையேயிடத்தினர்கோடீச்சுரேசர்பணிவரைமேல்
வரையேயெனுங்கொங்கைமின்னேசொன்மூலமறந்தவர்க்கென்
னுரையேறுமோநின்குறையாவுநீயேயுரையெதிர்ந்தே (௨௱௨௭

அலர்பார்த்துற்றவச்சக்கிளவி.

சிவன்றாதனுகிப்பரவைதன்பாலன்பிற்சென்றவந் த
பவன்றாபசோதிதென்கோடீச்சுரவெற்பிற்பைங்கழைவி ல்
லவன்றாற்றலரினுக்கச்சமின்றன்குனணிகமின் ஞ
ரிவண்டேற்றலரினுக்கஞ்சிலைறுநிலனேமையனே. (௨௨௮)

ஆறுபார்த்துற்றவச்சக்கிளவி.

தன்னேரிலாவரன்கோடீச்சுரவெற்பர்சாருநம்பா ற்
கன்னேர்மனங்கொண்டிருப்பதுநோக்கியுங்காதலுற் ற
வென்னேழைநெஞ்சீண்டொருக்கால்வரிற்கானிடையவர் த
முன்னேயெழுந்தீக்கரக்காயுருகிடுமொய்குழலே. (௨௨௯)

காமமிக்ககழிபடர்கிளவி

நறியமென்கொன்றையர்கோடீச்சுரநம்பர்நாகையிற்ச ங்
கெறிபெருவெங்கடலேயெனைநீயிளைந்திங்கட லே
வெறிமடிமேவிலையேயன்பரீங்கின்னுமேவிலை யே
மறிதருமாமைக்கணமேசொரியுமென்மைக்கணமே. (௨௩௰)

தன்னுட்கையாறெய்திடுகிளவி

நீறணிமேனியர்கோடீச்சுரநம்பர்நேசர்முன்பொ ய்
கூறல்கைதாயின்றுவட்புற்றலைவாய்க்குருகிழந் து
வீறளியார்களிரங்கக்கண்ணீர்சிந்திமெய்பசந்தி வ்
வாறடைந்தென்னையொத்தாய்பிரிந்தார்கொலுன்னன்பருமே. (௨௩௧)

தலைமகனெறிவிலக்குவித்தல்.

அரவக்கதிர்ச்சடைக்கோடீச்சுரேசரணிவரை வா
ழரவச்சிலம்படியாயன்பரொய்திலணைந்திரப் போ
ரிரவகற்றும்புகழோயகத்தேபொன்னையிட்டிவைத்தி ங்
கிரவினின்மேவிற்பழிப்பாம்வரல்வனத்தென்றுரையே. (௨௩௨)

தலைவிகுறிவிலக்குவித்தல்.

மின்போலுஞ்சூலத்தர்கோடீச்சுரவெற்பின்வேந்துவரி ற்
பொன்போன்மறுதாளிடைக்கதிர்தோன்றினபூம்புனத்தி ன்
முன்போற்சுகங்கொளும்போற்றிடப்போமெனமுந்தனையி ன்
றன்போடுறைத்தாள்வருவோம்வரவிங்கென்றங்குரையே. [௨௩௩

வெறிவிலக்குவித்தல்.

மறிகொண்டகையரன்கோடீச்சுரமன்னவானுதலா ய்
நெறிகொண்டமன்னர்தமைத்தொட்டுநானிங்குநீடுகவி ன்
முறிகொண்டதோர்ந்திலள்பேய்தொட்டதென்றெனைமூண்டரு [ர்பின்
வெறிகொண்டனலுறைதயோர்மருந்தீற்துவிலக்குகவே. (௨௩௪)

பிறர்விலக்குவித்தல்.

சேய்தந்தகண்ணினர்கோடீச்சுரமன்னசேயிழைநந்
தாய்தந்தையர்மணங்கொண்டெய்தளியார்தமக்கங்கென்ன
வாய்தந்திடுவர்சொல்லோவனையாரொன்மனக்கருத்தை
யாய்தந்திடுதற்கிமையோரலர்நீயறிவித்திடே. (௨௱௫)

குரவரைவரைவெதிர்கொள்ளுவித்தல்.

ஆலைக்குளிர்வயற்கோடீச்சுரநம்பரம்பொன்வெற்பிற்
சோலைக்குயின்மொழியாயன்பர்மன்றலந்தூதுவரின்
மாலைக்குழலனையாதியராங்குமருதிவரோ
பாலைக்குரியவொன்றேறுதிடென்றுமுல்லைபடர்ந்திடவே. (௨௱௬)

வினவியசெவிலிக்குமறைத்தமைவிளம்பல்.

நன்னித்திலநகைவாட்டங்கண்டாங்கெனைநண்ணிடலை
கன்னிக்கடுத்ததென்னென்றாள்பெருந்தகைக்காவலநா
னன்னதுலாம்புகழ்ச்சிங்கமுன்கண்ணுற்றதாகுமென்றே
னுன்னற்கரியவர்கோடீச்சுரேசருயர்வரைக்கே. (௨௱௭)

அலரறிவுறுத்தல்.

அடியார்க்கெளியவர்கோடீச்சுரேசரணிவரையின்
முடியார்மலர்க்கொம்பர்மேலுற்றிடுன்னளிமுன்னலுறு
கடியாரிவ்வூரிலெவ்வைமையறியாமற்கணியுறுபூங்
கொடியாரிடந்தொறும்போயலருண்டதுகொற்றவனே. (௨௱௮)

தாயறிவுறுத்தல்.

தவளப்பொன்னீற்றரன்கோடீச்சுரவெற்பதையலின்வாய்ப்
பவளம்விளர்ப்புறச்சேப்புறநீலமென்பார்வைகண்மெய்
துவளத்திகழுற்றதுகண்டனைசினந்தோன்றநின்று
ளவளக்களவறிந்தாளங்குநீவந்தகன்றபின்னே. (௨௱௯)

வெறியச்சுறுத்தல்.

பெருமையுறுபுகழ்க்கோடீச்சுரேசர்பிறங்கலன்ப
வருமையுறத்தனிப்போற்றிவளர்த்திட்டவன்னையின்று
கருமையுறுங்கண்ணிருண்மெலிவுற்றதுகண்டுடனே
யொருமைகொண்டுற்றதிரண்டுபங்காக்கிடவுள்ளினளே. (௨௱௰)

பிறர்வரைவுணர்த்தல்.

நின்னூர்தனக்கன்றுநீபோனபின்புநெடுவளத்தின்
முன்னூரமுத்தமிழ்க்கோடீச்சுரநம்பர்மால்வரைமேற்
பொன்னூர்வரைதனிற்கொண்டெமர்பாவிப்புலவரொலா
நன்னூலிடையெழிற்காரிகைகேட்கநணுகினரே. (௨௱௰௧)

வரைவெதிர்வுணர்த்தல்.

எட்டார்வடிவத்தர்கோடீச்சுரேசரொழில்வரையி ற்
கட்டாரணியுமெமருணைக்காணிற்களிப்பிறை டு
நட்டார்களாவரதன்பின்னர்நீயென்னவின்றிடினு ந்
தட்டாரப்பெண்ணைத்தருவாருனக்குத்தராதிபனே. (௨௪௨)

வரையுநாளுணர்த்தல்.

கணியார்மணமலர்மாலைதந்தார்தண்கதிரவன ல்
வணியார்தருகலையாவுங்கொண்டேகுற்றனன்ரவ ப்
பணியார்சடையெழிற்கோடீச்சுரேசர்பனிவரைக்க ண்
மணியார்செவ்வேலவமன்றல்செய்காலமருவிதுவே. (௨௪௩)

பாங்கிதலைமகளறிவுறுத்தல்.

பூமகள்வாழ்ந்திடுகோடீச்சுரநம்பர்பொன்மலையெ ந்
கோமகணீதிநெறியெம்மனோர்க்குக்குறித்துரைக் கு
நாமகளாயினளிப்போதப்போதுறுநாமகளு ங்
காமகள்வார்மலர்த்தாரண்ணலேயுட்களிப்புறவே. (௨௪௪)

குறிபெயர்த்திடுதல்.

வேதாகமம்புகல்கோடீச்சுரநம்பர்வெற்பிலெங்க ண்
மாதாமுன்னீயிங்குமாதாரங்கொண்டுவந்ததனை க்
காதாலறிந்தனள்கண்ணுலறியக்கருதுகின் று
ளுதாவினிவேறிடம்பார்த்துமின்னெடுநண்ணுகவே. (௨௪௫)

பகல்வருவானையிரவுவருகென்றல்.

பகலூடிரவழைத்திட்டோன்பரவும்பரமர்திரு ப்
புகலூருறைபவர்கோடீச்சுரமன்னபொன்னிடத்தி வ்
விகலூர்தனிற்பந்தடக்கஞ்செயலுக்கிராச்சிறந் த
தகலூரவெல்வரிற்கண்கட்டுவித்தையறிந்தனையே. (௨௪௬)

இரவுவருவானைப்பகல்வருகென்றல்

புகலோடரிக்கண்வரையரமாதர்பொருந்துநெ றி
யகலோதிராவரல்கோடீச்சுரநம்பரம்பொன்வெற் பி
விகலோங்குவேலவெழிற்றேசினைநீயினிப்பகல் வா
பகலோனிரவில்வருவதின்றேயிந்தப்பாரிடத்தே. (௨௪௭)

பகலினுமிரவினும்வயின்றுவருகென்றல்.

மையுறுகண்டர்தென்கோடீச்சுரமின்னின்வாயமு து
கையுறுவேலவிருபோதும்வந்துகலந்தருந் து
செய்யகதிர்மதிவாசமிராப்பகறீயதென்ப ர்
வெய்யபசியுடையோர்க்கொருபோதும்விலக்கிலையே. (௨௪௮)

பகலினுமிரவினுமகலிவனென்றல்.
அரும்பேயலர்ந்திடுங்காய்தரும்வேங்கையடவியி னீ
வரும்பேரிரவிற்பழுக்கும்பழிச்சொல்வரிற்பகலி ற்
கரும்பேய்ந்திடுவயற்கோடீச்சுரநங்கருத்தர்வெற்பி ற்
சுரும்பேறியதொடையாயினியாளென்சொலத்தக்கதே (௨௪௯)
உரவோனாடுமூருமுதலியகூறல்.
இளவெண்மதிபுனைகோடீச்சுரேசரிமையவெற் ப
தளர்மின்னிடையிடைநீவரையாதுறல்சால்பலநி ன்
வளர்பொன்னிநாட்டிற்குநல்லூர்க்குநின்மங்கலக்குடிக்கு ங்
கிளர்நலஞ்சாதிக்குஞ்சாதிக்கும்வாய்மைக்குங்கீர்த்திக்கு மே.
ஆறுபார்த்துற்றவச்சங்கூறல். (௨௫௰)
சுராசுரர்போற்றரன்கோடீச்சுரவெற்பர்துன்னிர வி
லராவுறுகான்வரிலஞ்சுவரோநின்றராவெனுநீ ள்
கராமலையுமலையாறெளிதோசங்கராவெனுமி த்
தராதலங்காக்குமன்றவுனக்கோதைதருங்கிள்ளையே. (௨௫௧)
ஆற்றுத்தன்மையாற்றக்கூறல்
செய்வண்டிலவுறுகோடீச்சுரநம்பர்தென்வரைவே
ளெய்வண்டுகொண்டுமின்னைவண்டுசோருமிருங்கட்கடல்
பெய்வண்டுளிகள்கொடுவண்பயோதரம்பெய்யநிற்கு
மொய்வண்டுறுதொடையாரூரொதுவெனுமுன்னரசே. (௨௫௨)
காவன்மிகவுரைத்தல்.
மின்னைநிகர்சடைக்கோடீச்சுரவள்ளல்வெற்பவிங் கு
முன்னையினன்றுவரவரக்காவன்முதிர்வடைந் த
தன்னைசிறிதுமிமையாதெப்போதுமருகுறுமெ ம்
பொன்னைக்களவிற்கவரவொண்ணுநினிப்புத்திக்குமே. (௨௫௩)
காமமிகவுரைத்தல்.
பொன்னகரீதிமையாரிதில்வாழ்குநர்போற்றும த
னென்னவெளிர்மன்னநீகற்பதாருவிலகிடெங் கு
ரன்னமூன்மீதுபடர்காமவல்லியணியடைந்தா ள்
பன்னுமிப்போதெழிற்கோடீச்சுரேசர்பணிவளைக்கே. (௨௫௪)
கனவுநலிவுரைத்தல்.
நெய்யார்மழுவரன்கோடீச்சுரமன்னநேரிழை யா
ளையாநெருநற்கனவிடைநீவந்ததுவுமவ ள்
கையாமலரைப்பிடி[illegible]துமீதுகலந்திடரு ள்
செய்யாதகன்றதுஞ்சொல்லிநைந்தாளிதென்சித்திரமே. ௨௫௫

கவின்புனைந்துரைத்தல்.

காரிலகுங்கண்டர்கோடீச்சுரமன்னகாரிகைமெ யீ
ரிலகுற்றதகலாவெழிலும்பெரிதகன் ற
தாரிலகுஞ்சுடர்வேலோய்நிலத்திடையங்கங்கு மூ
மேரிலராயிடிற்சிருரைராவர்கொலேன்மையரோ. (௨௫௬)

தன்பதிக்ககற்சிதலைவன்சாற்றல்.

சீதளநீர்ச்சடைக்கோடீச்சுரநம்பர்திண்சிலம்பி ன்
மாதளவன்னநகையாளிடையென்மனமிருக்க த்
தாதளவும்பொழிலெம்மூர்க்ககன்றன்றடங்கயற்க ண்
காதளவோடித்திரும்புமுன்மீள்குவன்காரிகையே. (௨௫௭)

பாங்கிதலைவனைச்செலவுவிலக்கல்.

மகமேருவில்லினர்கோடீச்சுரேசர்வரையிறை வ
சுகமேநடந்திடினக்குமுன்னுங்கடுலங்குமுன் னு
ரகமேபிறந்திடுவோமுணர்ந்தாங்கெனணங்கைமு லை
முகமேலழுந்தவெளிதின்மகிழ்ந்துமுயங்குகவே (௨௫௮)

தலைவனீங்கல்வேண்டல்.

சித்தரொனக்கூடலில்விளையாடியசித்தர்ப ர
முத்தரம்பொன்மதிற்கோடீச்சுரமன்னமொய்குழ லா
யத்தலமேருங்குறையொன்றுளனீயருள்வைத்திங் கோ
ருத்தரம்போவெனிற்றக்கணம்போதுவனூரடைந்தே. (௨௫௯)

பாங்கிவிடுத்தல்.

வதனமொரைந்துடைக்கோடீச்சுரேசர்வரையுறநீ ர்
பதமுன்பெயர்க்கும்பதந்தனிலோபிற்பதந்தனி லோ
மதன்கொடுங்கோல்கொடுசெங்கோற்கடவுள்வரும்வருமு ன்
கதழ்வின்வருவீரொனிலேகலாகுமெங்காவலரோ. (௨௬௰)

பாங்கிதலைவிக்குத்தலைவன்செலவுணர்த்தல்.

வனக்கொன்றைசூடரன்கோடீச்சுரமன்னவானுத லா
டனக்கிங்குநம்பிரிவாற்றுதொருகணந்தானுமெ ன
வெனக்குத்தெரியுந்தெரியுமெனக்கெனவெண்டனத் தே
ருனக்குத்தெரியுமன்றேயென்றவ்வூர்க்கவருற்றனரோ. (௨௬௧)

தலைவிநெஞ்சொடுபுலத்தல்.

நாளானவைகளிற்கோடீச்சுரேசர்நகத்திறைபொய் ச்
சூளார்மனத்தோடுறவாய்ப்பிரிந்துழித்துன்பம றி
னிலாதுகல்லாயிருக்கக்கல்லாதுநினைவழிந் து
வாளாவெனைநீவருத்தவென்னிற்குமடநெஞ்சமே. (௨௬௨)

சென்றேனிடலிற்காமமிக்கசுழிபடர்கிளவி

புலமெய்த்தவர்புகழ்கோடீச்சுரேசர்புகலியின்பா ற்
குலவுப்படுகளையேகண்டிலாய்கொலென்கொண்களை யே
நிலவுற்றிடுதிளையேயறியேன்சற்றுநித்திரை யே
சலமுற்றிடுசங்கமேயுறுமோவன்பர்தஞ்சங்கமே. (௨௬௩)

பாங்கியிறைவியையாற்றுவித்தல்.

கிளர்புகழ்வேந்தர்வருகின்றனருன்றன்கேதமெலா ந்
தளர்வுறச்செய்திடுநீதளரேன்மின்றளரிடையா ய்
வளர்பிறைநாளும்வளராதிருக்கவளர்சடைமே ற்
களவெம்பணியுய்த்தகோடீச்சுரவள்ளல்கார்வளைக்கே. (௨௬௪)

தலைவிக்கிறையோன்வந்தமையுணர்த்தல்.

பேராயிரத்தான்கோடீச்சுரவெற்பிற்பேரெழில் கொ
ளாராரயின்மன்னராரா நின்னெஞ்சகத்தார்வமதை த்
தேராதவரல்லர்தேராதவன்கடற்சென்றனன்மே ல்
வாராவொன்றேங்கிடல்வாராரிளமுலைவந்தனரே. (௨௬௫)

பாங்கிதலைவனொடுநொந்துவினாதல்.

தன்னொடுதானுறழ்கோடீச்சுரேசன்றனதருளா ன்
மின்னொடுநாளும்பிழைத்திருக்கின்றனன்வேலவ நீ
யென்னொடுகூடியகாலமெல்லாஞ்சென்றதெவ்விடத் தோ
வுன்னொடுகூடியிருந்ததன்றேயங்கனுன்னெஞ்சுமே. (௨௬௬)

தலைவன்பாங்கியொடுநொந்துவினாதல்.

கூற்றினைவாட்டியகோடீச்சுரேசர்குவட்டிளமா ன்
றேற்றியமாரனலருமிவ்வூரினர்தூற்றலரு ஞ்
சாற்றிடுதிங்கள்வந்தீயும்வெந்தீயுந்தனியிருந்தி ங்
காற்றியதெப்படியெப்படியாற்றுவித்தாயணங்கே. (௨௬௭)

பாங்கியாற்றுவித்திருந்தமைகூறல்.

கருந்தாழ்குழலியெங்கோடீச்சுரேசர்கருந்தடத்தி ல்
வருந்தாமலின்றுவருந்தாமமார்பன்வருந்தலென் று
மிருந்தார்ப்பொழிற்புள்ளிருந்தானுமுன்னாரெதிர்தெரிந்து ம்
பொருந்தார்ப்பொருந்தனிவேலநிற்போற்றியும்போற்றினனே

என்பொருட்பிரிவுணர்த்தேதற்கிறைக்கென்றல் (௨௬௮)

நளைவிடைப்பாகர்தென்கோடீச்சுரமன்னநன்னுதலா ய்
வளைவிடைவைத்துப்பொருட்கேகுவேன்மென்மனமுருகி க்
ளைவிடைநூலன்னகன்னியுற்றுலென்கதழ்வினையா ட்
குளைவிடைதந்திடுவத்திடுவேணிதியுஞ்ஞிடத்தே. (௨௬௯)

நின்பொருட்பிரிவுரை நீயவட்கென்றல்.

ஏடவிழ்தாமரைக்கண்ணனுங்கண்ணனுமின்னலுற்று நீ
தேடமுன்னின்றவர்கோடீச்சுரேசர்சிலம்பிறை வ
நாடக்கநகசபைக்கேகிடினீநறு நுதலை க்
கூடவழைத்தேகலையேனுமேகலைக்கூறவட்கே. (௨௭௰)

நீடேனென்றவனீங்கல்.

கனமுறுங்கண்டர்தென்கோடீச்சுரவெற்பிற்காரிகையெ ன்
மனமுறுமுற்சந்தனமுறுமச்சந்தனமனுமு றீ
றனமுறுமத்தந்தனமுறிலத்தந்தனவிடை யா
ளினமுறுமுத்தந்தனவிலைக்காமிங்ஙனெய்துவனே. (௨௭௧)

பாங்கிபொருட்பிரிவுதலைவிக்குணர்த்தல்.

இருகோடிவையென்றுலைவிலைக்காகவிறைவர்முத ல்
வருகோடினம்பணிகோடீச்சுரநம்பர்மால்வரை யி
னருகோடியுச்சியிலாவதுமாலையிலாவதிங் ங
ஞொருகோடிபொன்கொண்டணைகுவன்கோடியென்றுற்றனரோ

தலைவியிரங்கல். (௨௭௨)

மின்னனவேணியர்கோடீச்சுரேசர்வியன்சிலம்பி ன்
மன்னவரொன்றனைப்பித்தளையென்றுவரைந்துதனி ப்
பொன்னினுக்கேகினரொன்னுயிர்வேளம்பிற்போனபின்வ ந்
தன்னதையார்க்களித்தாருடன்வாழ்வரிங்கன்புடனே. (௨௭௩)

பாங்கிகொடுஞ்சொற்சொல்லல்

கண்டார்கலுழ்தற்குக்காரணந்தேர்ந்திடக்கண்கலக்க ங்
கொண்டாயிதுவென்னகோடீச்சுரேசர்குவட்டிறைவ ர்
வண்டார்குழலியெனக்கோபிறர்க்கோவரையுனக் கோ
மண்டாரழற்சுரஞ்சென்றார்பொருட்குவகுத்துரையே. (௨௭௪)

தலைவிகொடுஞ்சொற்சொல்லல்.

பாருயிராம்புனநீவளிவானம்பரிதிம தி
யாருயிராம்பரன்கோடீச்சுரவணங்கேயெளியே ற்
கீருயிரோருயிரீருயிராயதெனைப்பிரிவு ற்
றோருயிர்நீயென்றிருந்தனனீயதையோர்கிலையே. (௨௭௫)

வருகுவர்மீண்டெனப்பாங்கிவலித்தல்.

மலைகண்டவில்லினர்கோடீச்சுரநித்தர்மால்வரைமே ற்
கொலைகண்டவேற்கண்ணிகாண்வெயிலாற்றுயர்கூர்பிணை யி
னிலைகண்டுருகியருகினின்றேதன்னிழலுதவு ங்
கலைகண்டிடிற்பொருட்கேகுவரோகலைகண்டவரோ. (௨௭௬)

பருவங்கண்டுதலைவிபுலம்பல்

சேராரொனக்கறுத்தார்த்தம்புகொண்டுசிலைவளைத்துக்
காரானதுவந்தெதிர்ந்ததன்னூர்வரக்கண்டிலன்யான்
றேரார்கொலோவிதையாங்கித்திசைதேர்திரும்பிலையோ
தாரார்கடுக்கையர்கோடீச்சுரேசர்தடங்கிரிக்கே. (உஎஎ)

இருளைவம்பென்றல்.

கயிலாயநாதர்தென்கோடீச்சுரத்துன்கருங்குழலி
னியலானதற்கஞ்சியோடியகாரிவ்விடைத்தனிநீ
பயில்வாய்ந்துசற்றுப்பயங்காட்டவந்ததுபார்த்தலதயிம்
மயிலாடுகின்றதுகார்காலமன்றிதுவம்பணங்கே. (உஎஅ)

தலைவிமறுத்தல்.

நகைமுலைகாரன்றிதோமப்புகையெனிநன்கிசைத்தாய்
புகைதனைக்கண்டுமயிலாடுமோகொன்றைபூத்திடுமோ
தகைதருகோபமுறுமோவதுவிற்றரித்திடுமோ
திகையணியாடையர்கோடீச்சுரத்துத்திகைத்தனையே. (உஎகூ)

அவர்தூதாகிவந்ததிப்பொழுதெனத்துணைவிகூறல்.

தந்தேரிடையன்பர்தந்தேரிடையுறத்தாமிவர்ந்து
வந்தேனுனக்குமுன்னுனுமின்னூர்க்கென்வரவுணர்த்து
முந்தேகியென்றுநம்பால்விடுத்தாரிம்முகிலைநேயல்
பந்தேற்றகையுமைபங்கர்கோடீச்சுரப்பைந்தடத்தே. (உஅ0)

தலைமகளாற்றல்.

ஊரும்விடையான்கோடீச்சுரமெனுமூருறையு
மோருயிரீருடற்கெவ்வாறலையுமொவ்வோரனையாய்ச்
சாருமென்றூலுங்குறைபடுமேயெனுஞ்சால்புணர்ந்து
தேருடன்மீண்டுமுற்றாதும்விட்டாரவர்தேர்ந்தவரே. (உஅக)

அவனவட்புலம்பல்.

கூடலிழைத்ததிற்கண்ணீர்சொரிந்துகுறிப்பொருநா
ணீடல்கண்டேங்கிவரிக்குறிபார்த்தின்றுநெஞ்சுருகி
வாடலுற்றுங்குநந்தேர்வானேக்கிமயங்கிடுமே
யாடல்புரிசிவன்கோடீச்சுரத்துநம்மாருயிரே. (உஅஉ)

பாகனொடுசொல்லல்.

விடையூருமத்தர்தென்கோடீச்சுரத்தர்தம்வெற்பிலிவ்வான்
கடையூருங்கொண்டல்சொரிநீருமின்னைதைக்கண்டமின்கண்
மடையூருநீரும்பெருவெள்ளமாகிவழியதனி
லிடையூறதாமுன்வலவாசெலுத்திடுரதத்தையே. (உஅ௩)

மேகத்தொடுசொல்லல்.

இல்லென்றவர்க்கருள்கோடீச்சுர நம்பசோமவெற்பி ற்
செல்லென் றுனையறிந்தோர்சொல்லநீமுன்னர்ச்செல் லுகின்றாய்
நில்லென் றுநான்சொலினிற்பைகொல்லோசென் றநேர்முகிலே
வல்லென்றகொங்கைவருந்தா துநாநான்வருந்திறனே. (௨௮௪)

பாங்கிவலம்புரிகேட்டவன்வரவறிவுறுத்தல்.

கைச்சங்கம்போயிற்றெனமெலியேலிங்ஙன்காவலர்த ம்
மெய்ச்சங்கநல்கிடமேவுகின்றானமேன்மது ளா
யச்சங்கத்தேதமிழாய்ந்தகோடீச்சரத்தாதிவெற் பி
லிச்சங்கம்வந்துன்களத்துறவேற்பவிசைக்கின்றதே. (௨௮௫)

தலைவிவலம்புரிவாழ்த்தல்.

தொண்டானவர்க்கருள்கோடீச்சுரநம்பர்தூயவரைச்செ ல்
லொண்டார்புனையன்பர்திண்டேர்வரவெனக்கோதியனை த்
தண்டாதலைக்குந்துயர்ச்சங்கமாற்றியசங்கமி னி
வண்டாமரைக்கண்ணர்கைச்சங்கமாகிவயங்குகவே. (௨௮௬)

பாங்கிநினைத்தமைவினாதல்.

நடத்தொழிற்றில்லைப்பொதுவிற்செய்தாண்மலர் நாளுமென்
சிடத்துறச்செய்பரன்கோடீச்சரவெற்பினின்புறநல் [னெஞ்
வடத்திருமார்பவெப்போதெனுமாங்குன்மலரகப்பூ ந்
தடத்தெங்களன்னமணைந்ததுண்டோவுண்மைசாற்றுக வே.

தலைவனினைத்தமைசெப்பல். (௨௮௭)

எனைத்தன்னடிமையெனத்தடுத்தாண்டருளீசர்வ ரி
கனைத்துலவும்பொழிற்கோடீச்சரமின்கருதுமென்னெ ஞ்
சினைத்தன்றனத்தொருவார்கொண்டிறுக்கிமற்றிங்குவைத் தா
ளினைத்திடற்கங்கென்னசெய்வேனினைத்திலனேரிழை யே.

பாங்கிதலைவியையாற்றுவித்திருந்தமைகூறல். (௨௮௮)

பின்னனவேணியர்கோடீச்சுரேசர்தம்மெய்ம்மைய ரு
ளென்னனுபானத்திலுன்புகழ்மாத்திரையின்னள்செ வி
மன்னவுனைத்துட்கொளச்செய்துமன்னவமன்மதன் செ
யின்னலிறுவித்திருந்தனளித்திறமிந்நகரோ. (௨௮௯)

தலைவன்முலைவிலைவிடுத்தமைபாங்கிதலைவிக்குணர்த்தல்.

தந்தனநேரிடைபாகர்தென்கோடீச்சரத்தடத்து ந்
தந்தனமெல்லையிங்கில்லாதனநின்றனவிலையா த்
தந்தனரன்பர்மற்றிந்நாளினிநீதவிர்த்திடு வி
தந்தனநீடியவொல்லாமணம்பெறுதாழ்குழலே. (௨௯௦)

தலைவிநற்றாயுள்ளமகிழ்ச்சியுள்ளல்.

வேலையன்றுதைதென்கோடீச்சரவெற்பின்மேவுமன் னோ
யாலைவில்வேளனையாருக்குநங்கையினாலையு று
மாலைபுனைந்திடும்போதுமன்னார்கிளைமாலையின ங்
காலையங்கைப்பற்றுகாலையுமுள்ளங்களித்திடுமே. (௨௯௧)

பாங்கிதமர்வரைவெதிர்ந்தமைதலைவிக்குணர்த்தல்.

வேழத்துரிபுனைகோடீச்சுரேசர்விரும்புமெழி ற்
சோழநன்னாட்டன்பர்முன்னோர்நல்வேலையிற்றுன்னியு ய
ரீழமுநீடுகலிங்கமுமன்றறகியந்துவைப் ப
யாழனசொல்லிதந்தார்நமரோற்றனரின்புறவே. (௨௯௨)

தலைவியுவகையாற்றாதுளத்தொடுகிளத்தல்.

அனமேவுறுவயற்கோடீச்சரநம்பரம்பொன்வெற்பி ன்
மனமேவருந்தலிறைவர்வந்தார்நன்மணஞ்செயவி த்
தினமேயடைக்குமலர்தூற்றிடுமூர்ச்சிறுமியர்வா ய்
சினமேவியமதன்றேரோடலைவன்றெருவெங்குமே. (௨௯௩)

பாங்கிதலைவனைவாழ்த்தல்.

இன்னாடுபெருமதுபார்த்தயருநம்பின்னனுமே ன்
மன்னாதுவந்திங்கொருமாத்திரைதனின்மாற்றிறையி டீ
மின்னாள்கைப்பற்றியவ்வள்ளியுஞ்சேயுமுன்மேவலென ப்
பன்னாளும்வாழ்கதென்கோடீச்சுரேசர்பணிவரைக்கே. (௨௯௪)

மணம்பொருட்டாகவணங்கைப்பராநிலைகாட்டல்.

முன்பார்சிவன்றிருக்கோடீச்சரவெற்பமுத்தநகை ப்
பொன்பாவிழையுன்மணம்பொருட்டாகப்புகழணங் கை
யன்பான்மலர்தூஉய்ப்பலியோச்சிப்போற்றியருகினின் று
தென்பாலெழுங்கோகிலமொழிகேட்குந்திறத்தினையே. (௨௯௫)

அதுகண்டோன்மகிழ்தல்.

வின்னாணரவினர்கோடீச்சரநம்பர்வெற்பிடத் தி
லின்னாண்மணம்பெறநாம்வேண்டவேண்டுமிலங்குமிந்நா ண்
மன்னாவல்கொண்டெதிர்நின்றவர்தூஉய்நம்மணப்பொருட்டிப்
பொன்னாரணங்கைபராவனம்மேலவர்புண்ணியமே. (௨௯௬)

கையாறுதோழிகண்ணீர்துடைத்தல்.

அருங்கயிலாயத்தர்கோடீச்சரமன்னவாயிழைநீ ன்
னிருங்கதலிபடபுறநின்றிடுகாந்தளெழின்மவரி ன்
மருங்குறுசெய்யகமலத்தலர்ந்தமலர்க்குவ ளை
கருங்குளிர்முத்தந்தருந்திறனென்னதுகட்டுரையே. (௨௯௭)

தலைவிகலுழ்ந்தற்காரணங்கூறல்.

[illegible]ர்வார்தருசடைக்கோடீச்சுரநம்பர்தாரவெற்பை ச்
சேர்வாரத்தென்றனைச்சேர்வாரமன்னர்சிறிதுநன் மை
யார்வார்தரமுன்றனக்கிழைத்தாரொன்றன்றுளாக்கண் டு
நீர்வாருமென்றிடநீர்தனையேயவுநெடுவிழியே. (௨௯௮)

தெய்வங்காட்டித்தெளிப்பத்தெளிந்தமைகூறல்.

வெஞ்சமர்ச்சூர்படைக்கோடீச்சுரவள்ளல்வெற்பரி னி
யஞ்சலுனைப்பிரியேனெனத்தேவின்முன்றுங்குறைத்த ல்
வஞ்சகமென்பதறியேனிதுவரைமற்றத னை
யஞ்சனம்பார்த்தகண்ணெஞ்சிற்குமோதியழிகின்றதே. (௨௯௯)

தலைவிதலைவனிகந்தமையியம்பல்.

வேதாந்தமேவியகோடீச்சுரநித்தர்வெற்பரொரு க்
காதாரமானவராதாரமென்பதகங்குறியா ர்
தாதார்பொழிலிடைத்தாம்புணர்ஞான்றங்குத்தாழ்ந்திருந் த
போதாகரிசொல்லப்போதாவெனநகர்போயினரோ. (௩௱)

அதுகேட்டபாங்கியியற்பழித்தல்.

நல்லார்தொழுந்திருக்கோடீச்சுரத்துறைநம்பர்வெற்பி ன்
வல்லார்முலையந்தவல்லாளர்க்குன்றம்மனமரு வு
வில்லாரழன்முன்மெழுகொத்துருகிமெலிதலுறு ங்
கல்லார்மனமெனக்கல்லாயிருக்குமக்காவலர்க்கே. (௩௱௧)

தலைவியியற்படமொழிதல்.

வள்ளம்புலிபுனைகோடீச்சுரேசர்வரைத்தண்பொன் னி
வெள்ளஞ்சிலதினந்தாழினுமாங்குடன்மேவிப்பைங் கூ
ழுள்ளங்குளிர்ந்திடப்பாய்வதுபோலன்பரொண்டொடிநா ன்
கொள்ளருநீக்கிப்புரப்பான்கருதிக்குறுகுவரோ. (௩௱௨)

தெய்வம்பொறைகொளச்செல்குவமென்றல்.

சொரிவள்ளருளரன்கோடீச்சுரவெற்பர்சூளுரைத்து ப்
பிரிவண்ணிலரொன்றவர்பால்வெகுளேல்பிரிந்திடினு ம்
பரிவதெம்பாலுளர்தென்னேரகத்துப்பரம்பொரு ளே
விரிவடிவேலவென்றேத்துவம்வாசென்றுமெல்லியலே. (௩௱௩)

தலைவியில்வயிற்செறித்தமையியம்பல்.

விடவாரரவணிகோடீச்சுரவள்ளல்வெற்பிலிவ்வூ ர்
படவார்கடுற்றுமலையுமென்றுயர்மாலையும்பார் த்
தடல்வாள்விழிசிவந்திம்மனைநீங்கலென்றம்மனைவ ன்
றடவார்முலைத்தையலாய்முன்புறவெனைச்சாற்றினளே. (௩௱௪)

செவிலிகனையிருளவன்வரக்கண்டமைகூறல்.

மாலொருபாகர்தென்கோடீச்சுரந்தனைவாழ்த்திறைவர்
வேலொடுநென்னலிரவிற்குறியுற்றுமீண்டுசெலுங்
காலொருகள்வனிங்கேகலுற்றானென்றுகைந்நெரித்தாள்
பாலொடுதேனன்னசொல்லாயனைநான்பயந்தனனே. (௱௫)

எறிவளைவேற்றுமைக்கேதுவினவல்.

நெய்திகழ்சூலத்தர்கோடீச்சுரம்வாழ்நிருத்தர்வெற்பிற்
பொய்திகழ்நேரிடையாய்புனநீத்திங்குப்போந்தபின்மின்
மெய்குழையுற்றதெனைம்பால்சரிகொண்டுமென்கைவெறி
தெய்திடக்கங்கணங்கண்கொண்டதென்னீதெனக்குரையே. [(௱௬)

பாங்கிவெறிவிலக்கல்.

தோட்டுக்குளிர்பொழிற்கோடீச்சுரத்துறைசோதிவரை
வேட்டுக்குறவர்கள்பல்லோர்முனென்னைவெகுளலன்னே
காட்டுக்குள்வாழிவ்வணங்கையுங்கேளொருகாலத்துமிவ்
வாட்டுக்கும்பாட்டுக்கும்போகாதுமங்கையருந்துயரோ. (௱௭)

வெறிவிலக்கியவழிசெவிலிவினாதல்.

காதார்குழையரன்கோடீச்சுரவள்ளல்காதலனை
வேதாவைவெஞ்சிறைவைத்தோனைநாங்கண்மிகப்பணிந்து
போதார்குழலிதுயர்தீர்க்கும்போதிங்குப்போந்தணங்கே
நீதான்றடுத்ததென்னீதாமென்றோதுநெறியிதற்கே. (௱௮)

பூத்தருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.

நின்னடிநோக்கிப்பயமுற்றுநீடுகண்ணீருடனே
பன்னுமிப்போதங்கிருந்ததிதனைக்கண்பார்த்திடனக்
கன்னலஞ்சொல்லிகைத்தந்தானொருவன்முன்கார்ப்புனத்தோன்
றின்னதறிகுவன்கோடீச்சுரேசரிமையத்திலே. (௱௯)

புனறருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.

மன்றினுளாடல்செய்கோடீச்சுரநம்பர்மால்வரைப்பா
லன்றொருநாளணங்கனாரொடும்விளையாடிடுங்கான்
மன்றற்குழலம்முனிபோலப்பொன்னிவலஞ்சுழிவாய்ச்
சென்றிடல்பார்த்துற்றெடுத்தளித்தானொருதிண்ணியனே

களிறுதருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல். [(௱௰)

ஆங்கைக்கனலரன்கோடீச்சுரவெற்பிலஞ்சிமுன்செவ்
வெங்கைக்களிறொன்றுமெல்லியலாடணிமேவக்கண்டு
கொங்கைக்களிறொடுபோர்க்குறல்பார்த்ததிற்கூடொருவன்
செங்கைக்கதிர்வேலெறிந்தவட்காத்தன்னசேயெனவே (௱௰௧

தலைவிவேற்றுமைகண்டுநற்றாய்செவிலியைவினாதல்.

பொன்னகங்கோட்டரன்கோடீச்சரமன்னபூங்கொடிமெ ய்
நென்னுக்கின்றுமெலிந்ததவிர்ந்ததுநீள்பச லை
துன்னருங்கைவளைகாணேன்விழிப்புனல்சோர்வுகண் டே
னின்னலிவ்வின்னலிங்கேய்வதற்கேதுவின்னகை யே.

செவிலிநற்றாய்க்கறத்தொடுநிற்றல். [(௩௱௰௨)

சினங்காலுமேற்றரன்கோடீச்சரமன்னசேயிழையா ய்
புனங்காவல்செய்திடும்போதொருநாளங்குப்போந்தென து
மனங்காண்கிலேனதைக்காட்டுதியென்றொருமானவனி ன்
னனங்காழுறுநடையாண்மனங்கைக்கொண்டகன்றன னே.

நற்றாய்தமருக்கறத்தொடுநிற்றல். [(௩௱௰௩)

மருத்தண்கடுக்கையர்கோடீச்சரவெற்பில்வாழ்குவிர்ந ம்
முருத்தனலூரான்முதுக்குறைந்தாளினிமூன்றுமவ ள்
கருத்துக்கிசைந்தகருத்தற்குநல்குமின்கந்தனுக்கு த்
திருத்தகுவள்ளியைமுன்னீந்துவந்ததிறமெனவே. (௩௱௰௪)

பாங்கிதலைவற்குடன்போக்குணர்த்தல்.

வின்மதிசூடரன்கோடீச்சரவெற்பின்மேவர சே
வன்மதயானைபலதந்தியாயினும்வண்குறவ ர்
மென்மடமானையெளிதினல்காரிருள்வேலமெள் ள
நின்மதில்சூழூர்க்குடன்கொண்டுசெல்கென்னினைவிது வே.

தலைவனுடன்போக்குமறுத்தல். [(௩௱௰௫)

எயுஞ்சுடர்க்கண்ணர்கோடீச்சரமின்னிடைகடத்தி ற்
பேயுஞ்சுழல்கட்புலியுமுலாமதன்பேருளைத்தா ல்
வாயுஞ்சுடுமெண்மனமுஞ்சுடுமிகமற்றத னி
லாயுஞ்சுடர்த்தொடியன்னமுன்னெவ்வாறடிவைப்ப தே.

பாங்கிபோக்குடன்படுத்தல். [(௩௱௰௬)

மாலையன்போற்றிடுகோடீச்சரநித்தர்மால்வரைக் க
ணலையனங்கொப்பாயுன்னுடனடந்தாலனை ய
பாலையிற்கள்ளியங்காடும்வெங்காலும்படர்தழு ஞ்
சோலையுந்தென்றலும்வாவியும்போலுந்துடியிடைக் கே.

தலைமகன்போக்குடன்படுதல். [(௩௱௰௭)

கருந்திருக்கண்டர்தென்கோடீச்சரமன்னகன்னிதனி ப்
பருந்துபறக்குநிழலூடுசெல்லும்பருந்தழற்கா ன்
வருந்திறமில்லள்வருந்திடுமென்றென்மனந்தடுத்து மீ
பொருந்தினனின்சொற்றடுக்காதுநான்கொடுபோவதற் கே.
[(௩௱௰௮)

பாங்கிதலைவிக்குடன்போக்குணர்த்தல்.

உன்னிடமேவரன்கோடீச்சுரவெற்பருங்கள்கன் னி
பன்னிடுவேலைப்பணிவதல்லாதந்தப்பாலையு று
கன்னியைக்கண்டுபணிந்திலளேயெனக்கட்டுரைத்தா ர்
முன்னியதோர்ந்திலன்பின்னியநாண்மலர்மொய்குழ லே. [(௩௱௰௯)

தலைவிநாணழிவிரங்கல்.

கனத்தினைநேர்கண்டர்கோடீச்சுரவெற்பின்கண்ணுறுமெ ன்
றனத்துடன்றோன்றியென்கண்மணிபோலத்தணத்தலின் றி
மனத்துணையாகியிருந்திடுநாண்முன்மதிநுதலா ய்
வனத்திடைச்சென்றதுநானேகுவேனிறைவன்பினென் றே. (௩௨௰)

கற்பின்மேம்பாடுபாங்கிகூறல்.

தேனூட்டுகொன்றையர்கோடீச்சுரநித்தர்தென்சிலம்பி ன்
பானூட்டினைவிட்டுப்பானூட்டுமென்மொழிப்பாவைவெம்மு ட்
கானூட்டுங்கானுன்செலவோர்பெரிதன்றுகற்புடையோ ர்
வானூட்டினுஞ்செல்வரித்தேயம்விட்டுமகிழ்நர்பின்னே. (௩௨௧)

தலைவியொருப்பட்டெழுதல்.

வன்னெஞ்சிடத்தகல்கோடீச்சுரேசர்மணிவரைக்க ண்
மின்னெஞ்சுறுமிடையாய்நீயெழுதுயர்வேலைவிட்டெ ன்
றன்னெஞ்சுங்காவலர்தந்நெஞ்சுங்கூடியிங்கோதிடுங் கா
லென்னெஞ்சுமாறுசொலுமோவதுவுமிசைக்கின்றதே. (௩௨௨)

சுரத்தியல்புரைத்துழிச்சொல்லல்.

நீங்காவலர்மனைதன்னொடுதாய்சினநீள்கடலி ற்
பாங்காமுழுகியவெம்மையைப்பாலைப்படுதழற்க ;
போங்காலகற்றிரங்கோடீச்சுரேசர்புகழ்வரைக்
ஞங்காதரவுற்றிருப்பேன்பின்னியுமணையணங்கே. (௩௨௩)

கையடைகொடுத்தல்.

பம்பாலடியுறைகோடீச்சுரவள்ளல்பைம்பொன்வெற் ப
கொம்பாமருங்குலுக்காவியுநானுங்கொழுநனு நீ
நம்பாவருமின்னைவடனைக்காத்தியிந்நாளினின் னு
ளம்பாலொருபாலுருவானபோதினுமன்புவைத்தே. (௩௨௪)

பாங்கிவைகிருள்விடுத்தல்.

சொன்றுடுபூவையையிவார்கையிந்தன்னைதுன்பகற் றி
முன்றாழலினலர்தூற்றும்வாய்களைமூடியுங்க ள்
பின்றுவடியைப்பிடியாவருவேன்பிடிநடைமு ன்
சென்றார்கணிச்சியர்கோடீச்சுரந்தனைக்கூடுகவே. (௩௨௫)

தலைவன்சுரத்துய்த்தல்.

வெண்டிருநீற்றரன்கோடீச்சரவெற்பில்வெவ்வெயின்முன்
வண்டுகில்சென்னியிற்சேர்நுதலார்வெயர்மாற்றிடுகான்
மண்டழற்கல்லினிடருறுமெல்லெனவாறிழன்மேற்
கண்டுழிவைகுவங்கண்டதைப்போலுங்கனிமொழியே. (௫௨௬)

தலைமகன்பொழில்கண்டுவியத்தல்.

இருக்கோலிடும்புகழ்க்கோடீச்சரவிறையின்னருளாற்
பெருக்கோகைமேவக்கழிப்பாலைப்பாங்கர்ப்பெருமணஞ்சார்
திருக்கோலக்காவெதிர்கண்டேமிதில்வைகிச்சென்றிடுமென்
றுருக்கோகிலுன்னழைக்கின்றதுநமையொண்டொடியே.

அசைவறிந்திருத்தல். (௫௨௭)

கொடியிடையேற்றரன்கோடீச்சரநேர்கொடியிடைநின்
னடிமலர்சேர்ந்ததுமெய்யோதுவண்டதணிநுதல்வேர்
வடிதருகின்றதகன்மனைற்கூடழன்மண்டியதிக்
கடிமலர்க்காவிலுறைவோந்துயரங்கடியளவே. (௫௨௮)

உவந்தலர்சூட்டியுண்மகிழ்ந்துரைத்தல்.

சிவந்தபொன்மெய்யரன்கோடீச்சரமன்னசேயிழைநா
னவந்தருபாலைத்துயர்தீர்ந்திடநின்னடிபிடித்திட்
டுவந்தலர்சூட்டியவோதியைப்பார்த்தென்கணேறிடுமா
னிவந்திடுங்கோர்பொழிற்பூத்ததுபோன்றென்னெஞ்சினுக்கே

கண்டோரயிர்த்தல். [(௫௨௯)

வருவார்பரன்திருக்கோடீச்சரந்தனில்வாழ்பவரோ
மருவார்தருவிண்ணுலகினரோவிஞ்சைவல்லவரோ
வுருவார்மதனுமிரதியுமோவொன்றுமோர்ந்திலமால்
வெருவார்சுரத்துறவேதோநிமித்தமிம்மேலவர்க்கே. (௫௩௰)

கண்டோர்காதலின்விலக்கல்.

மலைவில்லரன்றிருக்கோடீச்சரந்தனைவாழ்த்தலர்போன்
றலைநீப்பவன்மேற்கடலாழ்ந்தனனாருகினியீன்
டலைமற்றிவளுமெலிந்தாளிரவெம்பிலைமருவிக்
கலையினுரியிற்றுயின்றெழுந்தேகையகாலையிலே. (௫௩௧)

கண்டோர்தம்பதியணிமைசாற்றல்.

குன்றிதுதன்னைக்கடந்துசென்றாலெதிர்கோபுரமு
மின்றிகழ்மெல்லிடையார்விளையாடுபொன்மேடைகளுந்
துன்றிணர்ச்சோலையுமாகிவில்வேலவதோன்றுந்தில்லை
மன்றினுளாடல்செய்கோடீசனேரண்டமாபுரமே. (௫௩௨)

தலைவன்றன்பதியடைந்தமைசாற்றல்.

இதுதான்சிவன்றிருக்கோடீச்சரமிதிலிதரன்றேர்
விதுவைக்குறைபடச்செய்ம்முகத்தாய்துகின்மென்கொடிநீ
டதுநம்மனையிதுவேதியபராவணமாவணமீ
துதுதண்கமலத்தடமிதுகாவிரியொண்ணதியே. (௱௫௩)

செவிலிபாங்கியைவினாதல்.

சாற்றாயெனக்குண்மையெங்கேகினாள்வஞ்சிதண்சுனைக்கோ
மேற்றாதுகுமலர்ப்பைம்பொழிற்கோவிங்குமென்கிளிகூஉய்த்
தோற்றாகுலமுறவாரழைத்தேகினர்தாயவிடை
யேற்றார்கொடியரன்கோடீச்சரமன்னவேற்றிழையே. (௱௫௪)

பாங்கிசெவிலிக்குணர்த்தல்.

மருதவனத்துறைகோடீச்சரநம்பர்மால்வரையாம்
பருவண்குறிஞ்சியினெய்தலுற்றாதியிற்பாங்கினுட
னொருதண்மலர்முல்லைமாலைதந்தான்றனுடனடந்தாள்
கருதுநின்பாலைகலங்கவிழ்த்தாரிற்கலங்கலையே. (௱௫௫)

செவிலிதேற்றுவோர்க்கெதிரழிந்துமொழிதல்.

நெருங்கிதழ்க்கொன்றையர்கோடீச்சரநம்பர்நேரியினன்
மருங்குவைத்தான்மருங்கென்றாரமேற்றிவளர்த்தமயில்
சுரங்கொண்டிடமருந்தீந்தெதிர்பண்டிதஞ்சொன்னவரைக்
குருங்குழலீரிங்கறியேனெளியேன்கலங்கினனே. (௱௫௬)

செவிலிதன்னறிவின்மைதன்னைநொந்துரைத்தல்.

ஓங்கருளீசர்தென்கோடீச்சரவெற்புறையுமலர்த்
தேங்கமழ்கோதையிபொன்சொல்லுவேன்றளிர்ச்சீறடிமுன்
வேங்கடநல்லதலங்கொலென்றெண்மிக்கமேன்மைத்தென்றே
றாங்கவளெண்ணமுய்த்தோர்ந்திலன்சென்றவருஞ்சுரமே. (௱௫௭)

செவிலிதெய்வம்வாழ்த்தல்.

அன்னேர்மிடற்றினர்கோடீச்சுரேசருண்மதலாய்
தென்னேரகமன்னகன்னேரகங்கொடுசென்றவள்வந்
தென்னேரகமுறச்செய்தனையேலுன்னெதிர்நிற்கவோர்
மன்னேர்மயில்விடுத்தெந்நேரமுமுனைவாழ்த்துவமே. (௱௫௮)

செவிலிநற்றாயக்கறத்தொடுநிற்றல்.

வேலைநஞ்சுண்டவர்கோடீச்சரமன்னமெல்லியலாய்
காலையிற்சார்ந்திணைகயுச்சியிற்குடனக்கையிலொரு
மாலைதந்தானொருயாலையொப்பானைதவாங்கிநந்தும்
பாலையப்பாலையிடத்தாங்கவன்பின்படர்ந்தனளே. (௱௫௯)

நற்றாய்பாங்கியொடுபுலம்பல்.

புகழிற்பெரிதுறுகோடீச்சுரேசர்பொருப்பிடத் து
நிகழிங்கொருவன்றன்மாலையுற்றாளிவணீடென வே
திகழிக்குறிப்புமுன்னீயுரைத்தான்மணஞ்செய்தவற் கே
மகளியற்றேக்கிவிடுவேன்கெடுத்தாய்மடமகளே. (௫௪௰)

பாங்கியொடுபுலம்பல்.

தாரிருந்தார்சடைக்கோடீச்சுரேசர்தடஞ்சிலம்பி ன்
வாரிருந்தாரம்புனைமுலையீரந்தமன்னிருந் தே
றாரிருந்தாலென்னிரமானடைந்தவருஞ்சுரத் தி
னீரிருந்தாவிங்கிவ்வாறலையாதென்றனெஞ்சகமே. (௫௪௧)

அயலாரொடுபுலம்பல்.

விண்பெற்றகீர்த்தியர்கோடீச்சுரநித்தர்வெற்புறமெ ன்
பண்பெற்றசொல்லியெனைவிட்டுப்போற்றியபாவியைவி ட்
டெண்பெற்றவன்பின்னடந்தாண்மகிழன்மினேந்திழையீ ர்
பெண்பெற்றபோதேதணியாத்துயரமும்பெற்றனமே.(௫௪௨

பயிலிடத்தொடுபுலம்பல்.

கிளையாடகவில்லர்கோடீச்சுரேசர்கிரிதனில்வ ந்
திளையாடுபூம்பொழிலேபுனமேமலரீர்ஞ்சுனை யே
வளையாடுகையினளும்மொடெப்போதுவருவளென்று ளீ
விளையாடத்தேடுமப்பேதையர்க்கோதவிளம்பிடுமே. (௫௪௩)

நிமித்தம்போற்றல்.

மின்றூர்சடையண்ணல்கோடீச்சுரமன்னமெல்லிய லை
யுன்றூவெளியேன்கனாயாமனிகனாவுற்றுதவி ற்
பொன்றூர்கலந்தனிற்பாயசஞானுமென்போனக மூ
மன்றூதரவொடுணக்களிப்பேன்கொம்பில்வாழ்கொடியே.௫௪௪

சுரந்தணிவித்தல்.

மேலையுறுவெங்கதிரோயெவருக்குமித்திர னே
மாலையிடங்கொண்டகோடீச்சுரேசர்வரைதனில்வி த்
கோலைநிகர்தருங்கண்மலர்வஞ்சிக்கொடிபடர்ந் த
பாலையைநீடுமருதமென்றோதிடப்பண்ணுகவே. (௫௪௫)

மென்மைத்தன்மைக்கிரங்கல்.

ஆய்ந்தார்புகழ்ந்திடுங்கோடீச்சுரேசரணிவரைமே ல்
வாய்ந்தாரமுதொத்திருந்திடுபேதைமலர்மிதிக் கி
லேய்ந்தாகுலமுறுமெவ்வாறுற்றாள்கடலேழும்பொங்கி ப்
பாய்ந்தாலும்வெம்மைதணியாதசெந்தழற்பாலையிலே. (௫௪௬)

இளமைத்தன்மைக்கிரங்கல்.

சோதிமுழுமுதல்கோடீச்சுரவிளந்தோகையுன் ற
றுதிமுடிப்பவராரங்கணமெடுத்தூட்டுவரா ர்
காதிமுதலோரிலரோயென்செய்திதழற்சுரத் தி
லாதிமுடியிலிவ்வாறேருவெழுதினனூரணனே. (கசஎ)

அச்சத்தன்மைக்கச்சமுற்றிரங்கல்.

சொல்லுஞ்சுருதியர்கோடீச்சுரேசர்துணைமலர்த் தா
ல்லும்பகலுங்கருதாதவர்செல்லருஞ்சுரத்தி ற்
கொல்லுங்கரியுந்தழலும்வந்தையோகுறுகவெதி ர்
புல்லும்பொழுதென்னென்றஞ்சுறுமோநந்தம்பொன்னுளமே. (கசஅ)

கண்டோரிரக்கம்.

செழுவான்பணிசிவன்கோடீச்சுரத்தின்றிசைகுறித்து த்
தொழுவாள்வளர்த்தவளீன்றளிப்பாவிதுடிக்குமெ தி
ரழுவாள்வன்பாங்கிபுலம்புவர்தாதியராங்கயர்ந் து
விழுவார்கள்பாங்கியர்சென்றதின்னூர்கடம்மெல்லுயிரோ (கசகூ)

செவிலியாற்றுத்தாயைத்தேற்றல்.

பங்கேருகத்திருவன்னாள்பொருட்டுப்பருவரலு ற்
றிங்கேவருந்திடல்கோடீச்சுரேசர்தமின்னரு ளா
லெங்கேயிருக்கினுமின்னேகொணர்வலிமைப்பொழு தி
லங்கேழணிபொற்றொடியாளொடுமற்றவனையுமே. (கருய)

ஆற்றிடைமுக்கோற்பகவரைவினாதல்.

பகையாறுவென்றைந்தடக்கியொண்ஞான்மறைபாடிமுக்கோல்
வகையாக்கரங்கொண்டிருநெறியோர்தனிவந்தெதிர்ந் த
தகையார்முனிவிர்முன்கோடீச்சுரேசர்தடங்கிரிவாய்த் த்
திகையார்தனத்தெங்கண்மாதொருகாளைபின்சென்றதுண்டே.

மிக்கோரேதுக்காட்டல். (கருக)

றனையின்றகொன்றையர்கோடீச்சுரவெற்பிளையன்மின் னே
தனையின்றவளைவிடுத்தணிவாரிடஞ்சார்ந்திடுமு த்
துனையின்றவளில்லினியுமுற்றுயிலையுன்மக ளு
மனையவளொருவன்பின்சென்றுளுலகியல்பாயிதுவே. (கருஉ)

எயிற்றியொடுபுலம்பல்.

கோளாடரவணிகோடீச்சுரேசர்குவட்டிடம த
வேளாசுகவிழிவேடர்மின்னேயொன்றுமம்விள்ளலின் றி
வாளாவிருந்திடப்பாவதமென்மகளொருத் த
னிளாநிழல்வரக்கண்டனையோவிங்குநின்றனையே. (கருங)

குரவொடுபுலம்பல்.

இடத்தேசமர்கண்டர்கோடீச்சுரநம்பர்வெற்புறமெ ன்
மடத்தேமொழியொருகாலைபின்றுமுன்னர்வந்ததுண் டோ
கடத்தேமலர்க்குரவேநகைக்கின்றனைகள்ளமுன் ற
னிடத்தேயிருக்கின்றதுமெலிந்தேன்புகலென்றனக்கே. (௫௰௪)

சுவடுகண்டிரங்கல்.

கண்டேமிருவரடியுமிங்காண்டன்னகாளைபுய ங்
கொண்டேநடந்தனன்போலுமுட்காகநங்கோற்றொடியை ப்
பண்டேமொழிபங்கர்கோடீச்சுரநித்தர்பைம்பொன்வெற் பி
லுண்டேயிவ்வாறுசுமந்தேதுகிடுசிலவும்பருமே. (௫௰௫)

கலந்துடன்வருவோர்க்கண்டுகேட்டல்.

மதனுமிரதியும்போல்வருவீரொருவார்த்தைதந்தே ன்
விதனங்களைந்திடுமும்மையொப்பாரொருவித்தக னு
மிதநங்கையுமிந்நெறியேயுமக்கெதிரேகின ரோ
வதநமொளிர்ந்துறைக்கோடீச்சுரேசர்வரையருகே. (௫௰௬)

அவர்புலம்பறேற்றல்.

அன்னையொப்பாயெதிர்நான்கண்டகாளையுமவ்விடத்தி ப்
பொன்னையொப்பாள்கண்டமெல்லியலாளுமிப்போதுசென்று
தன்னையொப்பாம்புகழ்ப்பொன்னியின்பாங்கர்ச்சடாடவியின்
மின்னையொப்பார்மகிழ்கோடீச்சுரநகர்மேவுவரோ. (௫௰௭)

செவிலிபுதல்வியைக்காணாதுகவலைகூர்தல்.

வன்றுகவில்லான்கோடீச்சுரந்தனைவாழ்த்திளர்த ந்
துன்றொளிசுரத்தெங்ஙனுங்காண்கிலன்றேமைகையையெ ன்
பொன்றொடிரும்பினளோவெனுந்தாயக்கென்புகல்வனி
யன்றுனுயிர்தரியாடரியாதென்றறிவியுமே. (௫௰௮)

தலைவிசெனகன்றமைசெவிலிதாய்க்குரைத்தல்.

நிலையாகியசெல்வமின்னேவருந்திருநேரிழையை த்
தொலையாதவெஞ்சுரங்கானகஞ்சோலைகடுன்னியொவ் வோ
ரிலையாகத்தேடினன்காணேனவளந்தவேந்தனுட ன்
சிலையானவெற்பினர்கோடீச்சுரநகர்சென்றிடுமே. (௫௰௯)

தலைவன்றம்மூர்சார்ந்தமைசாற்றல்.

தேன்வந்தகொன்றையர்கோடீச்சுரேசர்செழுஞ்சிலம்பி ன்
மான்வந்ததன்னமின்னேயுன்றன்மீதொருமால்களி று
தான்வந்தெதிருற்றதவ்விடமீங்கிதுதண்புன யே
நான்வந்துனைக்கண்டகாலிவன்றன்னதுநம்பதியே. (௫[illegible])

தலைவிமுன்செல்வோர்தம்மோடுதான்வரல்பாங்கியர்க்குணர்வி
முற்றுமுலைபங்கர்கோடீச்சுரத்தெனைமுன்னியிளங் [த்தல்.
கற்றுவெனைதையும்பாங்கியர்பான்மறைகற்றறித் ந
நற்றமணைத்தொடையீருள்ளநாண்முற்றுநன்குவிற் று
விற்றுமவேந்தவொடுநான்வரன்முன்விளம்பிடுமே. (௫௬௧)

முன்சென்றோர்பாங்கியர்க்குணர்த்தல்.

பாந்தீண்டழன்மின்பறிகொடுத்தோமென்றுபாவையுற் ற
சுரந்தீர்ந்தன்றைறெடும்பால்விளையாடற்குத்துன்னினன்மு ப்
புரந்தியுறப்புரிகோடீச்சுரேசர்புகழ்வளை மே
லரந்திட்டுவாரன்னகண்ணீர்முன்சிற்றிலமைத்திடுமே. (௫௬௨)

பாங்கியர்கேட்டுநற்றாய்க்குணர்த்தல்.

நொந்தாரம்போல்விழிநீர்சொரியேயொருநோவுமின்றி ச்
சந்தாரிளமுலைகோடீச்சுரேசர்தமதருளா ல்
வந்தாளிறைவனொடுமீண்டெனச்சிலர்வந்துமொ ழி
தந்தாரன்னையின்றுதான்பயந்தாயந்தத்தையலையே. (௫௬௩)

நற்றாய்தலைமகனுளங்கோள்வேலனைவினாதல்.

நாலாரணன்பணிகோடீச்சுரேசர்தந்நாட்டினு று
வேலாவுனையொன்றுகேட்கனுற்றேன்சுரமீண்டுவரு ங்
கோலாகலன்மின்னையென்மனைக்கேயுறக்கூட்டிடு மோர்
பாலாகிய தன்மனையுய்க்குமோவெண்ணிப்பார்த்துரையே. ௫௬௪

நற்றாய்மணமனையர்வேட்கையிற்செவிலியைவினாதல்.

பொன்மலர்ச்செஞ்சடைக்கோடீச்சுரேசனைப்போற்றிறைவன்
றன்மனைப்பான்மின்னைக்கொண்டேகினுமவன்றுயொடு நா
முன்மனைப்பான்முற்கிலசடங்காற்றிமெல்லோதிதன த்
தென்மனைப்பான்மணஞ்செய்திடச்செய்கென்றியம்புவமே.

செவிலிக்கிகுளைவரைந்தமையுணர்த்தல். [(௫௬௫)

தகரத்தனிவரியாறைந்துணர்வந்துசாற்றினர்த ந்
நகரத்திலேதந்தமர்சூழமன்றனவின்றனரா ம்
பகரத்தலைவர்நம்மொண்ணுதலாட்கியல்பாங்கிறு மி
மகரத்தடங்குழைக்கோடீச்சுரேசர்வரையனையே. (௫௬௬)

வரைந்தமைசெவிலிநற்றாய்க்குணர்த்தல்.

மாதிவணீமுன்புகோடீச்சுரேசர்வரத்திற்பெற் ற
பாதிரியோதுபருதியிறைப்பண்பகரிருசொ ல்
லாதியுமீறும்புணர்பேர்முன்றாகினளவ்வர ச
னேறிமற்றையதானுன்மணந்தங்களேரிழைத்தே. (௫௬௭)

தலைவன்பாங்கிக்கியான்வரைந்தமைநுமர்க்கியம்பென்றல்

கந்தனந்தாதைதென்கோடீச்சரமன்னகன்னிமுன் பு
தந்தனண் மாலையெமக்கின்றெம்மாலையைத்தன்கழுத்தி ட்
டந்தனநீடுமெம்மூர்மன்றலாற்றியணையளோ டு
வந்தனம்வந்தனஞ்செய்வானுமர்க்குரைவாணுதலே. (ருசுஅ)

பாங்கிதானதுமுன்னேசாற்றினேனென்றல்.

மால்பற்றிடத்தினர்கோடீச்சரவரைவாழ்மொழிமர்க்கு ப்
பால்பற்றிய நுமர்தம்முன்புநீமணப்பந்தரின்மி ன்
கால்பற்றியதுமென்மந்திரமோதிக்கைபற்றியதூஉ ம்
வேல்பற்றியமன்னமுன்னேயுரைத்தேன்மிகமகிழ்ந்தே. (ருகூக

நீங்குங்கிழத்திபாங்கியர்க்குத்தன்செலவுணர்த்திவிடுத்தல்.

இல்லத்தும்பாலுறநெஞ்சோதிற்றன்னைதையேலுங்கற் பு
மெல்லத்தடுத்தழைத்தேகலிற்போவலென்வேந்தர்பின்னெ ன்
றொல்லத்துடியிடைப்பாங்கியர்க்கென்செலவோதிச்சென்மின்
சொல்லத்தகையரன்கோடீச்சரவெற்பிற்றூயவரே. (ருஎய)

தலைவிதன்செலவீன்றாட்குணர்த்துவிடுத்தல்.

சேலையுகைப்பவர்கோடீச்சுரேசர்சிலம்பிலென்ற ன்
பாவைபெங்கேகினளென்றழுந்தாய்க்கென்பணிவுரைத்து க்
கோவைவிரும்பியுடன்போதலுஞ்சொல்லிக்கூட்டுறமெ ன்
பூவையைப்போற்றச்சொன்னேனென்றுமோதுமின்பூசுரரே.

நற்றாய்க்கந்தணர்மொழிதல்.

தெள்ளம்புலிபுனைகோடீச்சுரேசர்சிலம்பிடத் து
வெள்ளம்வருமுனைகோவிடாததுமேற்பட்ட போர
துள்ளமுருகியென்கண்டேமுன்பெண்ணையங்கோதுமொ ரு
வள்ளல்பின்சென்றுள்வருவாள்சின்னாளின்மனைக்கணங்கே. ருஎஉ

தமர்பின்சேறலைத்தலைவிகண்டிரங்கல்.

ஆனவித்தற்கென்னசெய்வோமிறையையருக்கனைமே ற்
றானவர்சூழ்ந்திடுமாறெனப்போர்செயத்தாவிநந்த ங்
கானவர்சூழ்ந்தனர்வில்லம்புவேல்வளைகைப்பிடித் து
வானவர்சூழ்ந்திடுகோடீச்சரநம்பர்மால்வரைக்கே. (ருஎரு)

தலைவன்றலைவியைவிடுத்தல்.

தேனேற்றகோதைவனவேடரொருதிண்கணையி ல்
வானேற்றுவேனிவராவியெல்லாநுமர்வந்தன ரோ
ரானேற்றினர்திருக்கோடீச்சுரேசரணிவரைக் க
ணூனேற்றிடாதகல்வேனியவர்பின்னடந்தருளே. (ருஎச)

தமரின்பின்செல்பவள்வன்புறநோக்கிக்கவன்றரற்றல்.

வெற்றிகொள்வேந்தர்தென்கோடீச்சரம்வாழ்விமலர்வெற்பிற்
குற்றியன்மேவிடுகாமூன்றோருயிர்கூடுறுங்கா
லொற்றியமெய்விட்டகல்வதினம்மையிற்குய்த்தகன்றூர்
பற்றியவேடர்வரனோக்கிறம்மேற்பரிவிதுவே (ருஎரு)

உணர்ந்தூழிக்கண்டோர்மகிழ்ந்துரைத்தல்.

அன்றியல்வெள்ளிசெவ்வேண்மணநோக்கினமாங்கதன்பி
னின்றிவர்செய்ம்மணங்கண்டோமிவைமற்றிரண்டினுமே
ரூன்றவர்பேதையர்மன்றல்கண்டோர்விழிகொண்டதின்ப
மொன்றிரூன்றுகட்கோடீச்சரவள்ளலோங்கலிலே. (ருஎசு)

தலைவன்றலைவிதன்பாங்கியைப்புகழ்தல்.

கான்செய்தகொன்றையர்கோடீச்சுரேசர்கிரிவரைமேந்
றேன்செய்தனவித்திருவின்பநானுறச்செய்யுனக்கு
நான்செய்திடுநன்றிகாணேன்கதிர்முலைநன்னுதலாய்
வான்செய்தநன்றிக்குலகோரியற்றுங்கைம்மாறிலையே. (ருஎஎ)

தலைவனைப்பாங்கிவாழ்த்தல்.

இங்கடியேற்குமுகமென்னுமன்னவென்றனையு
மெங்குலத்தோடிந்தமின்னையும்போற்றினையின்னமொடு
திங்களரங்கண்ணியர்கோடீச்சரந்தனிற்செந்திருவும்
பங்கயக்கண்ணனும்போல்வாழ்தியென்றும்பலனுறவே. (ருஎஅ)

தலைவியைவரைவுநாளளவும்வருந்தாதிருந்தமைவினாதல்.

இமையாதிருத்தியிமைக்கிற்பிரிவென்றிறைவர்முன்னின்
றுமையாளிடத்தினர்கோடீச்சுரேசருயர்வரைப்பா
லமையார்புயத்தாயனைகாப்பினுநீடருந்தனத்துக்
கமையாளிவர்தம்பிரிவினுமெவ்வாறிருந்தனையே. (ருஎகூ)

தலைவிவருந்தாதிருந்தமைகூறல்.

சிதம்பயில்வேந்தருள்கோடீச்சுரநகர்த்தேவர்பிரான்
பதம்பணியாரழற்கண்போலிருந்துபனிக்கதிரோன்
வதம்புரிதென்றற்படைக்கன்னல்வில்வேளினைமாற்றியெனக்
கிதம்பண்ணியவதனாற்றுயர்காண்கிலேனற்றிழையே. (ருஅய)

பாங்கிதலைவனைவருந்தாதிருந்தமைவினாதல்.

மையமர்கண்டர்தென்கோடீச்சரமன்னமன்னவெற்பிற்
செய்யுறுமிந்தமடவன்னமின்றிமுன்செஞ்சிலைவே
ளையம்புருபொழுதவ்வாறுநீவந்தடர்தனுறு
மெய்யவிரகப்பசிபொறுத்தாய்சொல்விரைந்திடவே. (ருஅக)

பாங்கிசெவிலிக்கிருவரன்புமுரைத்தல்.

வேலுறங்கண்ணிக்குமேந்தற்குமெய்யுருவேறிவர் க
ளேலுறுமாவியுமுள்ளமுமன்புடனின்புமொன் று
மாலுறுபாகத்தர்கோடீச்சுரத்தெங்கண்மன்னுமுயி ர்
போலுறுமம்மனைநோக்கிடிங்கின்னதன்புண்ணியமே (௫௮௨)

பாங்கியில்வாழ்க்கைநன்றென்றுசெவிலிக்குரைத்தல்.

வன்புற்றரவணிகோடீச்சுரேசர்வரையிலுன்பெ ண்
மென்புத்தனம்விருந்தோர்க்கூட்டியேபந்தற்கும்வேண்டியிட் ட
இன்புற்றுப்பின்றுயில்கூர்ந்துமுன்காலையெழுந்திறைஞ்சி ங்
யன்புற்றிடுமனைவாழ்க்கையின்மேலவளாயினளே. (௫௮௩)

செவிலிதலைவிகற்பியனற்றாய்க்குரைத்தல்.

வாலியனீற்றரன்கோடீச்சுரந்தனில்வாழ்ந்திடுந ம்
பாலியற்சொல்லியிறைமீதுவைத்தபரிவுமவ ண்
மேலியற்கற்பும்பொறையுமுணர்ந்திடுமேதினியோ ர்
சாலியப்பெண்ணெனக்கூறுகின்றார்மலர்த்தாழ்குழலே. (௫௮௪)

செவிலிமனைவாழ்க்கைத்தன்மையுரைத்தல்.

மறியார்கரத்தரன்கோடீச்சுரத்துநம்வாணுதலா ள்
வறியார்க்கிரங்கலறங்காத்தலின்சொன்மருவுறுத ன்
னெறியார்பொருட்குத்தகவேயழித்தனிகழ்பிற வு
மறியாநடக்குமனைவாழ்க்கையினன்கமைந்தனளே. (௫௮௫)

செவிலிநற்றாய்க்கிருவர்காதலுமுரைத்தல்.

சந்திரசேகரர்கோடீச்சுரமன்னனைதயன்மின் னே
தந்திரமாகத்தன்காதலைக்கேள்வர்தமக்களித் து
முந்திரவாநவர்காதலைத்தான்கொண்டமோகத்த வ
ரந்திரத்தேரெங்ஙனேகினுமாலையிலீண்டுறுமே. (௫௮௬)

காதலன்பிரிவுழிக்கண்டோர்புலவிக்கேதுவிதாமிறைவிக்கென்றல்.

ஆடகவில்வரன்கோடீச்சுரத்திருந்தவண்ணலந் த
நாடகம்பாட்டியலுட்கோளபிநயநாடிவிழை ந
தேடகப்பூங்குழல்வேசையிற்கேகிடுமீதிறை வி
யூடகமிக்கபுலவியின்காரணத்துற்றிடுமே. (௫௮௭)

தனித்துழியிறைவிதுனித்தழுதிரங்கல்.

வினைத்துயர்தீர்த்திடுங்கோடீச்சுரநம்பர்வெற்பிலு ல
கனைத்தையும்வெல்வேள்கலகத்திலிந்தவமளியி லே
யெனைத்தனிவைத்துப்பிறரிலங்காத்தற்கிறைவர்சென்று ர
கனைத்துறுதென்றலுற்றிங்கணும்வந்தனைக்காக்குமென்றே.

நங்கிதுவென்னெனப்பாங்கிவினுதல்.

இரவியெழுந்துமிருளேதிமையவரித்திரன்மா ல்
பரவிவணங்குதென்கோடீச்சுரவள்ளல்பைம்பொன்வெற்பி ற்
குரவிவருங்குழன்மானேமகிழ்ந்துகொழுநருன்க ண்
விரவியிருந்திடுந்நாளின்னலேதுவிளம்புகவே. (௩௮௯)

இறைமகன்புறத்தொழுக்கிறைமகளுணர்த்தல்.

பதுமாதனன்பணிகோடீச்சுரேசர்பனிவரைவா ழ்
விதுமாமுகிசென்றுசென்றுபல்போதினும்வீழ்ந்துவ ரி
மதுமாந்திடுதலின்மாலாயென்னின்பமருவினவ ர்
பொதுமாதரின்புமுறவகன்றார்கண்ணன்போக்கறிந்தே. (௩௯௰)

தலைவியைப்பாங்கிகழறல்.

பணவரவம்புனைகோடீச்சுரேசர்பனிவரைப்பொ ன்
னணவரம்பைக்கிணையுருமன்வேசையர்க்காசைகொண்டா ர்
மணவரத்தாரன்பரொன்றிகழேல்குலமாதர்மின் னே
கணவரதேதமெடுத்தோதன்மாண்பன்றுகற்பினுக்கே. (௩௯௧)

செவ்வணியணிந்துசேடியைவிடப்புழியவ்வணியுழையர்கண்டுமு
முன்னேவறிதிலிகழ்வார்கள்வீதியிம்மொய்குழலாள் [ங்கிக்கூறல்
கொன்னேபவளமுஞ்செஞ்சாந்தும்வெட்சியின்கொத்துமணிந்
தென்னேபடர்தனம்மின்னிலைகாட்டற்கிசைந்ததன் றி
தன்னேர்மிடற்றினர்கோடீச்சுரமென்னணிநகர்க்கே. (௩௯௨)

பரத்தையர்கண்டுபழித்தல்

மாமலர்க்கொன்றையர்கோடீச்சுரத்துறுமாதகத்தி ற்
பூமகளாயதவடன்னிறையும்புறத்தெவரு ந்
தாமறிவுற்றிடத்தானுமப்பூமகடானென வே
காமருசெந்துகில்பூண்டனளோவிந்தக்காரிகையே. (௩௯௩)

பரத்தையருலகியனோக்கிவிடுத்தல்

கருந்திருக்கண்டர்தென்கோடீச்சுரத்துன்கடிமனையி ற்
பொருந்தியமுல்லைக்கொடிபூத்ததாகப்புகன்றனர்க ள்
பெருந்திறன்மன்னவநீயேகிநோக்கிப்பெருமகிழ்வு ற்
றிருந்துகின்றுவ்பின்னர்வந்தருள்வாயிவணென்மனைக்கே (௩௯௪)

தலைவன்வரவுகண்டுவந்துவாயில்கண்மொழிதல்.

ஐயீரவடியுற்றநால்வர்க்குமுப்பொருளன்பினொ டு
கையாலுணர்த்தான்கோடீச்சுரமன்னர்காரிகையி ன்
மெய்யார்ந்தசெவ்வணிகண்டுடன்மீண்டனர்மென்குறிப்பு ச்
செய்யாமுன்னேர்வோர்க்குளாயாற்பயனென்னேதெமொழியே

தலைமகன்வரவுபாங்கிதலைவிக்குணர்த்தல்.

அருளுற்றமெய்யரன்கோடீச்சுரமன்னவாயிழை யா
பிருளுற்றிடவிப்படிபுறம்போனவிரவிவரி ந்
றெருளுற்றுவகையுறுவொவர்வேந்தர்தெருவில்வந்தா ர்
மருளுற்றிடாதெதிர்கண்டேத்தியில்லம்வரவழையே. (௫௯௬)

தலைவியெதிர்கொண்டுபணிதல்.

கனம்வந்தனகண்டர்கோடீச்சுரத்துணைக்கண்டவுட ன்
றனம்வந்ததென்றுகளிகூர்மடந்தையர்தம்மைவிட் டு
மனம்வந்ததோவிங்கெளியேனிருக்குமனைவரவி த்
தினம்வந்தனந்தருகின்றன்கோடிதிறலரசே. (௫௯௭)

புணர்ச்சியின்மகிழ்தல்.

மாலையன்போற்றரன்கோடீச்சுரமின்வழங்கியவி வ்
வேலையினின்றிங்கொருவலைவீசிவிரவிடொ ரு
சேலையுட்பற்றினமோர்பணம்விற்றனஞ்செங்கையுற் ற
தாலைவில்வேட்குங்கிடையாதிவ்வேலையவனியிலே. (௫௯௮)

வெள்ளணியணிந்துவிடுத்துழித்தலைவன்வந்துபாங்கியைவேண்டல்.

எள்ளருஞ்சீரரன்கோடீச்சுரத்தனதேவலினால்
வெள்ளணிபூண்டுவருமாதைக்கண்டிங்குமேவினன்மே ற்
கள்ளவிழ்கோதைமலர்த்திருமாதைக்கலந்திடச் செ
யுள்ளவும்மெனைவாடாதுகாத்தருளொண்ணுதலே. (௫௯௯)

தலைவிநெய்யாடியதிகுளைசாற்றல்.

பாலாழிதிங்கட்பயந்தாங்கெழின்மகப்பங்கயத்தி ன்
மேலானமாதுயிர்த்துநெய்யாடினள்விற்றிகி ரி
மாலானவற்கருள்கோடீச்சுரேசனைவாழ்த்துமெங்க ள்
கோலாகலவின்றென்றுலாவதிங்கெவன்கூறுகவே. (௬௱)

தலைவன்றன்மனத்துவகைகூர்தல்.

வேணியிலாற்றினர்கோடீச்சுரந்தனில்வீற்றிருக்கு ம்
வாணிகர்கண்ணிதன்பாலார்முலையுநெய்வார்குழலு ம்
பாணியிற்பாலனுமேனியினீடுபசுநரம்பு ங்
காணியவென்னதவஞ்செய்தனஞ்சென்றகாலத்திலே. (௬௱௧)

தலைவிக்கவன்வரல்பாங்கிசாற்றல்.

ஊற்றுமணமெனத்தன்னடிக்கென்னெஞ்சுருகிடச்செ யி
கோற்றொடிபாகன்றென்கோடீச்சுரமன்னிகூர்விழியா யி
யாற்றினஞ்சூழ்வடிவேலார்நரகப்படுகடனி ண்
றேற்றக்களைசேர்மதலையைநோக்குதற்கெய்தினரே. (௬௱௨)

தலைவியுணர்ந்து தலைவனொடுபுலத்தல்.

புரத்தையெரித்தவர்கோடீச்சரம்வாழ்புகழிறை வ
பரத்தைநம்புற்றவந்தீண்டென்னகாரியம்பற்றிடும வ்
வுரத்தையுறும்பலம்போற்கிடையாதிங்குறும்பயமெ ண்
கரத்தைவிடுவிடுதானையையேதென்னகைதவமே. (௪௱௩)

தலைவிபாணனைமறுத்தல்.

சேணையுறுபுகழ்க்கோடீச்சுரேசர்சிலம்பிடைநி ன்
வீணையிசைக்கவந்தாயினுங்கேட்டிங்குமெச்சுவரா ர்
நாணையிகழ்ந்ததனுவினுக்காமிந்தரம்பிசை நீ
காணையிற்சேடிவெகுண்டுமுன்பாணகடிதகலே. (௪௱௪)

வாயின்மறுக்கப்பட்டபாணன்கூறல்.

வின்மால்வரைச்சிவன்கோடீச்சரந்தனில்வீற்றிருக்கு ம்
வன்மால்களிற்றண்ணனுன்பேருரைத்திடின்வையகத்தோ ர்
பொன்மாரிதூஉமணிமாரியரப்பொழிவர்பெரு ங்
கன்மாரிபெய்தனளெம்பெருமாட்டிகறுத்துநின்றே. (௪௱௫)

விறலிவாயின்மறுத்தல்.

அப்புறுவேணியர்கோடீச்சுரேசரசலத்திறே ர்
கொப்புறுவீணைகொடுபாடுபாடினிகூறுமி து
தப்புவெங்காடியுந்தேனுவின்பாலுஞ்சருக்கல... யு
முப்புநிகரெனச்செல்காவலர்க்கிசையுன்னிசையே (௪௱௬)

பாங்கிவாயின்மறுத்தல்

அகவினைதீர்த்தருள்கோடீச்சுரேசரடிபணிந்தோ ர்
மகவருளென்றுங்கிரந்தவர்சூளையர்மார்விற்சிக்கி த்
தக்வுறுமச்செய்தவழ்ந்தது நோக்கிலர்தன்மழலை ச்
சுகமொழிகேட்கிலர்நின்றுரின்றுற்றதென்சொல்லணங்கே. ௪௱௭

விருந்தொடுவந்துழித்தலைவிபொறுத்தமைகண்டுதலைவன்மகிழ்ந்த
தம்மைநிகர்பவர்கோடீச்சரந்தனிற்றண்பிறைநேர் [வ்.
செம்மைநுதற்கணேநிம்மாதுதன்மைச்சிலையினையு ங்
கொம்மைமுலைவேசையர்க்காப்படர்க்கைகொடுமையங் கு
நம்மையுமுன்னிலைசேர்த்திட்டதற்றவிந்நல்விருந்தே. (௪௱௮)

பள்ளியிடத்தழுங்கல்.

அறங்காட்டுசொல்லரன்கோடீச்சரமன்னவாயிழைநி ன்
றிறங்காட்டிகல்கொண்மனுளர்வந்தாலெதிர்தேர்செலுத் தி
மறங்காட்டுவேழமுகைத்தாடல்செய்யமதித்தல்விட்டு ப்
புறங்காட்டுதலென்னவீரங்கொலோவிந்தப்பூவகத்தே. (௪௱௯)

ஓரேறலென்றவள்சீறடிதொழுதல்.

கானலைநீயொன்றலையுற்றமான்வரிற்காசினியி ல்
வானலைவெள்ளம்வெகுண்டிடுமோமுன்வரவென வே
மானலையுற்றேன்பிழைபொறுத்தாளென்றன்வந்தனங் கோ
ளானலைசூலத்தர்கோடீச்சரமன்னவொண்டொடியே. (௨௱௰)

இஃதெங்கையாகாணிவனென்றன்றென்றல்.

வையுறுங்குலத்தர்கோடீச்சரத்தென்கண்மன்னவ நீ
செய்யும்வணக்கமுமாதர்கண்டாலங்ஙன்கோவொட்டா ர்
மையலடைந்துபின்னன்னவர்தம்மனைவாயினின் று
கையிலிருந்தனமுமிழந்துகலங்குவையே. (௨௱௰௧)

அங்கவரியாரையுமறியேனென்றல்.

தேங்கமழ்கொன்றையர்கோடீச்சுரேசர்சிலம்புறு தே
மாங்கனியார்ந்துசுகமாவிருந்திடுவண்கிளிபோ ய்
வேங்கருங்கானத்திடைக்காஞ்சிரங்காய்மிசைந்திடு மோ
பாங்கரும்பாழுலைநானறியேனொருபாவமுமே. (௨௱௰௨)

காமக்கிழத்தியைக்கண்டமைபகர்தல்.

வேயிருட்கண்டர்தென்கோடீச்சரமன்னவீதியிலு ன்
சேயினைப்பற்றிமுலைமேலணைத்தனள்சென்றன ளோ
ராயிழைபார்த்ததையோர்மாதொருத்திக்கவன்கிறி ய
தாயிவளென்றனளுருமறிந்ததுன்றன்களவே. (௨௱௰௩)

தலைவியைப்பாங்கிதணித்தல்.

இலவினிதழ்ச்செய்பவாய்மங்கையுப்பமைந்திட்டதுபோ ற்
புலவியதுமிகுந்தற்றூநீட்டிடல்பொன்மலர்த்தா ர்
நிலவிடுவார்சடைக்கோடீச்சுரேசர்நெடுங்கிரிமே ற்
பலவின்பகழ்மன்னருன்றாள்பணிந்தனர்பார்த்தருளே. (௨௱௰௪)

தணியாளாகத்தலைமகனூடல்.

வாமான்கரங்கொண்டகோடீச்சுரேசர்வரையிலிவ ளு
மாமால்கரிமுன்னும்பூவார்சுனையினும்வந்தெனை நீ
காமாநிலமன்னவென்றதக்காலமிக்காலநெஞ் சே
நாமாரிவட்குநமக்கிவளார்விடுநட்பினையே. (௨௱௰௫)

பாங்கிதலைவனையிகழ்தல்.

முன்னாள்விருப்பினைப்பொன்னுடனீந்துமுருகருந் து
மின்னார்க்கவரிடைவேறுமனமும்வெகுளியுங்கொ ண்
டென்னாமுநினைச்சீறுகின்றாயுனக்கிதழகன் [(௨௱௰௬)
றென்னாவெல்விடைக்கோடீச்சுரேசர்வெற்போங்கர சே.

ஆயிழைமைந்தனுமாற்றுமையும்வாயிலாகவரவெதிர்கோடல்
கந்தனையீன்றவர்கோடீச்சரத்துறுகாவலர்நீர்
மைந்தனைத்தோட்கொண்டுதந்திரமாவிங்குவந்தடைந்தீர்
நிந்தனைமாதர்மயக்கிடையென்றனினைவுமகு
வந்தனைவுற்றதுசிந்தனைசெய்திடின்மாவியப்பே. (சாயஎ)

புணர்ந்தவன்போயபின்பாங்கியொடுதன்மகனைப்புகழ்தல்.

மருப்பயில்கொன்றையர்கோடீச்சுரத்துமறுகினிடை
யிருப்புறுவேசையிற்கேகுறுந்தோன்றலிரதந்தனைத்
திருப்பினன்சேணின்றுநம்மனைவாயுறச்சேயிவன்று
விருப்புறக்கற்றதெங்கோவலவத்தொழின்மெல்லியலே. [(சாயஅ)

தலைவிதலைவனைப்புகழ்தல்.

சக்கரமாற்கருள்கோடீச்சுரேசர்தடஞ்சிலம்பர்
புக்கதிற்போகவிலைமாதரில்லிடைப்போகவிலைத்
தொக்கநம்பால்வைத்தகாதலிந்நாண்மிகத்தோன்றியது
மிக்கவர்நேசமிடையூறுறாதென்றன்மெய்யணங்கே. (சாயகூ)

பாங்கிதலைவியைப்புகழ்தல்.

திருந்திழைபாகர்தென்கோடீச்சுரேசர்செழுஞ்சிலம்பிற்
பொருந்துமிவ்வஞ்சியருள்பூத்திறையோன்புரிபிழைமிக்
கிருந்ததையெண்ணிமுன்காயாதுறுபலனீந்ததறு
லருந்திறற்கற்புக்கரசியென்றேதிடுமம்புவியே. (சாஉய)

கல்விக்குப்பிரிவுதலைவன்பாங்கிக்குணர்த்தல்.

செல்விவளர்திருக்கோடீச்சுரேசர்செழுங்கிரிமேற்
சொல்விறலுற்றவருமுதனன்குற்றொகவியற்றும்
பல்விதமானபுகழ்நல்கும்வேந்தர்பரவச்செயுங்
கல்வியழகேயழகாமெவருக்குங்காரிகையே. (சாஉக)

கல்விப்பிரிவுபாங்கிமறுத்தல்.

நிறந்தருகுலத்தர்கோடீச்சுரம்வாழ்நிருபசென்று
சிறந்திடுகல்விகள்வேண்டுவயாவையுந்தேர்ந்துபின்னை
ரிறந்தமின்னுமொன்னையன்னார்களாகவியற்றுதற்கோர்
திறந்தருவிஞ்சையுங்கற்றறிகாணவுன்செல்வியையே. (சாஉஉ)

தலைவனுடன்படுத்தல்.

கடமாவுரிபோர்த்தினமுகில்சூழுங்கதிர்ப்பவரைத்
தடமால்வரைபுரைகோடீச்சுரேசர்தமிழ்வெற்பிலோர்.
மடமானையென்றனக்கீந்தாயம்மாவெறும்வாழ்ந்திடநான்
நடமார்கலையிறையாயினன்றேகவின்சேயிழையே. (சாஉங)

கல்விப்பிரிவுபாங்கிதலைவிக்குணர்த்தல்.

வெற்றிகொண்மால்விடைக்கோடீச்சுரவள்ளல்வெற்பனை ய
மற்றிணிதோளுடைச்சுந்தரரானநம்மன்னவர்நூ ல்
பற்றிடுவாக்கரசாகிமெய்ஞ்ஞானசம்பந்தர்பத ம்
பெற்றிடவெண்ணிப்பிரிந்தாரின்றேதப்பிறைநுதலே. (௪௨௪)

தலைவிகார்ப்பருவங்கண்டுவருந்தல்.

கல்விக்கடலைப்பருகிவந்தீண்டுக்கவிமழைத ன்
சொல்வித்தகமுறப்பெய்வதற்கேகினர்தோன்றுமுன்னி ச்
செல்விற்குனித்தம்புதூற்றிடுமேலென்னசெய்குவனியா ன்
வல்விற்செறியிழைகோடீச்சுரேசர்வரையிடத்தே. (௪௨௫)

பாங்கியாற்றுவித்தல்.

மதிபுனைவேணியர்கோடீச்சுரமன்னமாதிறை வ
ரதிர்மணித்தேர்வந்ததுவால்வளைகைக்கணியணியை க்
கதிர்முலையேற்றலர்கூந்தலில்வேய்விற்கலைபுனைந் தி
டெதிர்சென்றழைத்திடுவோமெழுந்திடுங்கின்னலையே (௪௨௬

காவற்பிரிவுதலைவனுணர்த்தவுணர்ந்ததோழிதலைவிக்குணர்த்தல்.

பொன்னலமேருவிற்கோடீச்சுரேசனைப்போற்றிடு ந
மன்னவர்காவலனாவானூரியதன்மாதனை நீ
டின்னாருமற்புரப்போனென்றார்நென்னலின்றகன்றா ர்
கன்னலஞ்சொல்லிமண்காக்கமுன்னீதுகருதிலனே. (௪௨௭)

தலைவிகூதிர்ப்பருவங்கண்டுவருந்தல்.

ஆடைவன்றோலுடைக்கோடீச்சுரேசரசலத்துறு ம்
வாடையிவ்வாடையிற்றீர்ந்திடுமோவன்பர்மார்பமின்றி ப்
பேடைதன்சேவல்சிறகாலணைத்தும்பெரிதய ரு
மோடையுறுகார்க்குலமும்வெளிர்த்ததுடன்முற்றுமே. (௪௨௮

தோழியாற்றுவித்த.

செயிர்விடைப்பாகர்தென்கோடீச்சுரேசர்செழுஞ்சிலம்பி ல்
வயிருடனன்பர்பொற்றேர்மணியார்க்கின்றமத்துறுமெ ன்
றயிரானநீதளரேல்சரற்காலத்தகையுணர்ந்து ன்
னுயிரினைக்காக்கவந்தார்நிலங்காத்தல்விட்டொண்ணுத லே.

தூதிற்பிரிவுதலைமகனுணர்ந்ததோழிதலைவிக்குணர்த்தல்.

பாலங்கொள்கையினர்கோடீச்சுரேசர்பரங்கிரித ன்
வேலரிருமன்னர்போருறிடந்தனின்மேவியூதி ர்
சாலத்தணிகைகண்டணைடித்திருப்பதிசாருதுமெ ன்
றாலங்குடிகொண்டகண்ணனங்கேயின்றகன்றனரே. (௪௩௰)

தலைவிமுன்பனிப்பருவங்கண்டுவருந்தல்.

முன்பனியெங்கும்புகைபோற்பரந்ததுமுன்னமனு ம்
வன்பனிதன்கண்மறைந்தென்றனாருயிர்வாங்கவ ரு
மன்பனில்காலத்தவனெடெவ்வாறமராற்றுவல் பே
ரின்பனிராகுவன்கோடீச்சுரேசனிமவரைக்கே. (௬௩௧)

தோழியாற்றுவித்தல்.

அசைஞாயிறுதிங்கட்கண்ணான்செவ்வாயினனற்புதன்வி ண்
மிசைவாய்புகழ்த்திருக்கோடீச்சுரவண்ணல்வெற்பிடத் தி
விசைவாவியாழுஞ்சொல்வெள்ளியற்கோற்றொடியிப்பொழுது
னசைவாய்ந்துபொய்வசனியாதமன்னிங்குநண்ணுறுமே. [ன்

துணைவயிற்பிரிவுதலைவனுணர்ந்ததோழிதலைவிக்குணர்த்தல்.

வானூர்மதிச்சடைக்கோடீச்சுரேசர்வரையிடத் தி
லூனூர்வடிவேலிறைவரோர்வேந்துக்குதவியுற ப்
போனூர்வடகின்றன்னன்பர்வந்தார்துணைப்போயெனநீ
நானூர்தரவருவேனெனவோதிநறுநுதலே. (௬௩௩)

தலைவிபின்பனிப்பருவங்கண்டுவருந்தல்.

காலனைக்கால்கொண்டுதைத்துயிர்வாட்டிக்கலங்கிடொ ரு
பாலனைக்காத்தவர்கோடீச்சுரத்திற்பரவைவிட ம்
போலனைபின்பனியாலென்றனாருயிர்போதலுறி ன்
மேலனைபோதுமின்னேபழிவேந்தனைமேவிடுமே. (௬௩௪)

துணைவயிற்பிரிவிற்றோழியாற்றுவித்தல்,

நீடல்லெனுங்கண்டர்கோடீச்சுரமன்னநேரிழை யோ
ராடலவற்காவடுதுறைமேவிடரசையெண்ணி ச்
கூடலைப்பார்த்துறுநெல்லையுநோக்கிக்குலவுமன ம்
வாடலவற்கிறைவெற்றியங்கீர்நின்றுவந்திடுமே. (௬௩௫)

தலைவன்பொருட்பிரிவுபாங்கிக்குணர்த்தல்.

பொன்னேயெனுமுன்னவசமுற்றொல்லைப்புறந்தட வி
யென்னேயெனட்பின்விழித்தெழுத்தெங்குற்றதித்துணைநா ள்
சொன்னேயென்றாட்கென்பொருட்பிரிவென்னெனக்கூறுவ னீ
யின்னேயெதிர்புகல்கோடீச்சுரநம்பர்வெற்பிடத்தே. (௬௩௬)

பொருட்பிரிவுபாங்கிதலைவிக்குணர்த்தல்.

படுவொன்றறம்பொருளின்பெனுமூன்றனுட்பாங்கிரண் டு
நடுவொன்றுரைதெளிவுண்டாமென்றேதிநலந்தரு மா
வடுவொன்றிரண்டுவகிரன்னகண்ணிமகிழ்நர்சென்று ர்
கடுவொன்றுகந்தரர்கோடீச்சுரேசர்தண்கார்வரைக்கே. (௬௩௭)

தலைவியிளவேனில்கண்டுவருந்தல்.

மென்மலர்க்கொன்றையர்கோடீச்சரத்திளவேனில்கொண் டு
தூன்மதிவெண்குடையானந்தநீள்கடற்றூர்ந்துபிப்போ ர்
மன்மதன்றூதுவரர்கோல்விசையமருவ்வ ரு
மென்மனம்வாடுமிங்கீதறியார்பொருட்கேகினரே. (௪௱௮)

பாங்கியாற்றுவித்தல்.

கங்கைகொள்வேணியர்கோடீச்சரேசர்தண்காவிரிநா ட்
டங்கயமுனைமுலைத்தென்குமரியனநடை யர்
யிங்கினிச்சிந்துநன்கோதாவரியுறையீர்ந்தொடையா ர்
தங்கவருகின்றனர்வேனில்கண்டுதளர்ந்திடலே, (௪௱௯)

தலைவனுருவுவெளிப்பாடுகண்டுசொல்லியது.

பொன்னுறுமேனியர்கோடீச்சரேசர்பொருப்பிலொ ரு
மின்னுறுகின்றதிலேபிறையும்வியன்குமிழு ம்
பன்னுறுவில்லுங்கணையுங்கமலப்பருமுலை யு
மென்னுறுபார்வைமுன்னெங்குனுந்தோன்றுமிதென்வியப் பே

ஊர்வந்ததலைமகன்பாகற்குச்சொல்லியது. [(௪௱௰)

மலைவளைகையினர்கோடீச்சரம்வாழ்வலவமுன் வா
னிலவரர்மாதவிகைத்திறங்கேட்டுளனீடதன் பு
னுலைவறுசீர்நளன்செய்கைகண்டேனின்[illegible]றக்குன்கைகண்டேன்
சிலைநுதல்பாலென்மனத்தின்முன்றேற[illegible]ச்செய்தனை யே.

பாங்கிதலைவன்வந்துழிமகிழ்ந்துரைத்தல். [(௪௱௰௧)

மின்னிற்கிளர்சடைக்கோடீச்சரவள்ளல்வெற்புறநி ன்
பொன்னிற்குப்பொன்னுமணிக்குமணியும்புரவல நீ
மன்னிற்குளெங்குநிறைத்தாய்கொணர்ந்துமகிழ்வினினி க்
கன்னிக்குயின்மொழிதன்னுமில்வாழ்க்கைகனந்தருமே. (௪௱௰௨)

தலைமகளோடிருந்ததலைவன்கார்ப்பருவங்கண்டுசொல்லியது

புறத்தாழ்மென்பூங்குழற்பொன்னிடைவந்துபுணர்தலுற்றே ன்
றிறத்தார்மழுப்படைக்கோடீச்சரேசர்செழுமிட று
நிறத்தாட்சிலம்புசடையருளாமெனநீயினிமெ ய்
கறுத்தார்த்துமின்னிப்பொழிமழைநாளுங்கனமுகிலே. (௪௱௰௩)

கோடீச்சரக்கோவைமுற்றிற்று.

## சிலகவிகளிற்சிலசொற்களுக்குப்பொருளறிவித்தல்.

க. இடையில்-நடுவில்-இடையில்லாத-ஆவி-உயிர்-தடாகம்.

உ. மதியோடொளிரும்விண்ணில் - மதியொடுவிளங்குகின்ற-விண்போல்.

௩. பூ-திலம்-மலர்-வேர்-வேர்-வேர்வு-எறியஎறின-படி-பூமி-தன்மை.

௫. நல்கும்-நல்குவள்-மன-பொருந்த

௭. தோட்டங்கொள்காவலர்க்கு- இதழழகுடையசோலைமலருக்கு.

௮. ஏழை-ஏழை-மடந்தை-கூழை-கூழினை- கூந்தல்- காவலர்-அரசர்-சோலைமலர்.

௯. வண்டர்-வண்டுகள்-தலைப்படல்- சென்னியிற்பட்டிருத்தல்-தொடங்கல்.

௰௨. ஏவலர்-ஏவலாளர்-அம்பாகியமலர்.

௰௪. பாங்கியராக-பக்கத்திற்சென்றவராக-சாந்தம்-சந்தனமரம்-பொறுமை-போதம்-ஞானம்-பூவழகு- அளி-கருணை-வண்டு-மாதவி-குருக்கத்தி-தவத்தினள்.

௰௮. எய்ந்திட- பொருந்திட- மேய்ந்திட- விழைவாவதனை-ஆசையை-ஆசையாகியபசுவை- நாண்- கயிறு- வெட்கம்-அகம்-மனம்-வீடு.

உ௰. பூத்தவேர்-வேர்-ஏர்-அளி- வண்டு- அன்பு- முலைக்கொடி-முலையுடையகொடி- முல்லைக்கொடி- நகை- அரும்பு-முறுவல்-மணம்-வாசம்-புணர்ச்சி.

உக. காரிகை-அழகு-பெண்-உரம்-மார்பு- வலி-நல்லம்-ஒருபட்டணம்-வல்-சூதாடுகருவி-கூடல்-மதுரை-புணர்வு.

௩க. சங்கம்-புணர்ச்சி-தமிழாய்ந்தவர்- இன்பமுணர்ந்தவர்.

௩௫. விஞ்சிக்கொடி - பெருமையுடையவிந்தக்கொடிக்கு-பற்று-ஆதாரம்.

௩௭. ஆகவம்-போர்- மாமன்- திருவினையகன்-மாமி- திருவினுஞ்சிறந்தவள்-மீ-குறிகியது.

௫௧. கோதையிவள்-கோதையுடையவிவள்-கடை-தாழ்வு-கடைதல்.

௫௨. நூலிடையுநீடுகூந்தலுமுடையாளுடையதொடர்பை-தன்னூலிடத்து ஒருவன்முதலியஐம்பாற்றொடர்பை.

௫௩. மனப்போதகம்-மனயானை-அங்குசம்-அழகியதனம்-தோட்டி.

௫௪. கலைபொருந்தியமதி-தனாயிலிருக்கும்பணி-மாதினைப்பணி.

௫௫. வாளியற்றோ-வாளிபோல்வதோ-வாளினியல்புடையதோ-எவ்வியலுடையது.

௫௬. பழனம்-ஒரூர்-பழத்தினழகு-காவணம்நள்ளாறு-இரண்டூர்-சோலையிடத்துற்றநடுவழி-கமலை-ஆரூர்-திரு-பூவணம்-ஒரூர்-பூவினவண்ணம்-சத்திமுத்தம்-ஒரூர்-வேல்-முத்து-அளகை-கூந்தலழகு-தஞ்சநகரம்-மாவனம்-வண்டின்கூட்டம்-ஒரூர்-மாயூரம்-ஒரூர்-மயில்-வலஞ்சுழி-வலஞ்சுழித்திருக்கின்றசுழி-ஒரூர்.

௫௭. திருவேரகம்-திருவிருக்குமழகியவிடம்-ஒருதலம்-வைகரா-இராத-ஒரூர்.

௫௮. ஐயாறு-அழகியவழி-ஒருதலம்-திங்களூர்-திருவாலம்பொழில்-மதிமேற்றவழுமாலம்பொழில்-இரண்டூர்-விசையமங்கைத்திரு-மங்கையாகியதிரு-விசையமங்கை-ஒரூர்.

௫௮. பொன்னிமருங்கு-பொன்றெப்பாரதிடைகாவிரிப்பக்கம்-எரண்டமாபுரம்-கொட்டையூர்அழகியவுடம்பு-மேன்மைகொளின்னம்பர்-மேல்-மையெழுதப்பட்டவினிபவம்புபோன்றகண்-மகிலைமயுற்றவின்னம்பரொன்னுந்தலம்.

௬௫. வாசுகிநற்பன்னகம்-வா-சுகி-நற்பல்-நகம்-வாசுகியெனும்பாம்பு-நிறம்-மார்பு-ஒளி.

௬௬. அசையாததொய்யிலெழுத்தினங்கியசிறப்புப்பொருந்தியபந்துபோன்றதனத்தினழகும் மடித்தமாலைபூண்டவுறுப்பாகியமார்பும்பொருந்தியமடந்தை-எழுத்துமசையுஞ் சீருந்தளையுமடியுந்தொடையுங் கூறுமூறுப்பியலும்பாவினியலும்பொருந்தியகாரிகையாகியநூலின்பழி

௯௬. இறையோகஞானம் - ஒரிறைவனதுபுணர்ச்சியுண்மையறிதல்.

௭0. கட்பொறி - கண்ணிலெழுந்ததீப்பொறி - கண் - மணிபொருந்திய - வேல் - வேலை - சமுத்திரம் - கார்த்திகையுடுக்களின் - பிள்ளை - நட்சத்திரநாயகன்.

௭௨. கந்தருவம் - பண் - எண்வகைமணத்திலொருமணம்.

௭௯. கருவாய்வனம் - கருநிலக்காடு - கருவிற்படும்பிறவிக்காடு - சிவபுரம் - சிவலோகம் - ஒருதலம்.

௯௫. கன்னற்சிறுவிலை - சிறியகருப்புவின்னாயகன் - நாழிகைதோறுங்குறைகின்றசிறுவிலைக்காலம்.

௱௧. போதாரளகக்குமரி - மலர்பொருந்தியகூந்தலுடைய பெண் - அரிய நீர்வடிவாகியவிந்தநதி - ஆட - மூழ்க - புணர - நெறிக்கண் - வழியில் - நெறித்தகண் - வட்டமணிந்தமூலை - வட்டமலை - நீதரின் - மூழ்குவன் - புணர்வேன்.

௱௯. உவரி - கயிலை - வரணை - கம்பை - இவற்றிடையெழுத்தாகியவயிரம் - இதன்பேர்.

௱0. வேறுகண்ணிக்கு - அலையாதே - வேறுநினைந்துவாடாதே - மடன்மாவேறி - பூவுடையமாவில் - பனைமடலாற்செய்தபரியிலேறி.

௱௧௪. மாதரையோர் - உலகத்தோர் - மாதினிடையாகியவின்னுக்கு - விசும்பிற்கு - அதுவுண்டு - அதுவுளதுமெய்தான்.

௱௪௪. அத்தம் - கை - அத்தநாள் - திதிவாரயோககரணம் - நிலையுற்றவன்புறுபுணர்ச்சிலீலைகள்.

௱௫௬. உத்தமவாலையர் - கொடுத்தார் - கொடுத்தவர் - மாலையாகியவிப்போதுவந்தொருமூத்தங்கொடுத்தால்.

௨௱௫. சிகரத்துதித்துவருகின்றநதி - காவிரி - இதிற்பின்னேகியதுகாவி - வகரமுன்மேவுகுளம் - வகுளம் - அதுமகிழமரம்.

௨௱௧௯. கவ்வரியினிரண்டு - கா - முன்னது - க - காகத்துக்கஞ்சகின்ற - ௯௬ - கூகை.

௨௱௧௬. நீர்கொண்டசேலை - நீர்துளிக்கின்றசேல்போன்றகண்ணை - பயலை - பசலை.

௨௱௨௫. கொங்கு - தாது - வேடன்படை - மதன்கணை - பொற்குவை - அழகின்குவை.

உ௱சுக. மலர்மாலை- ஒழுங்காகப்பூத்தமலர்- கலை-கலை- துகில்- உடை-உடைப்பரிவேட்டம்.

உ௱௫௬. நிலத்திடை-அங்கங்குழும்- அங்கங்கேயுழும்- அங்கத்திற்கூடும்-எழுகு- உழுமேர்- சீர்- சிறப்பு- செல்வம்- ஏழையர் மாதர்-ஏழையர்கள்.

உ௱௫௬. தக்கணம்போதுவன்-அந்தக்ஷணம்வருவேன்.

உ௱௬௭. துடையாகியகதலிப்புறத்து நிற்கின்றகாந்தளாகியகையின்மீதுற்றதாமரையாகியமுகத்துக்குவளையாகியகண்-முத்தம்போலநீர்த்துளிகள்.

௩௱௪. கூந்தல்சரிந்து-கைவளைபோய்- வெறிதாக- கங்கணம்- நீர்த்துளி.

௩௱௰. அம்முனி-அந்தவேரண்டமுனிவன்போல.

௩௱௪௪. சுரம்பாலைநிலம்-பண்டிதம்-முன்னவருக்கிதம்பேசினவர்.

௩௪௮. கொல்-பொற்கொல்லன்-கரிகரி-யானை-பொன்-பொன்னெத்தமகள்.

௩௱௫உ. தனையின்றவளை-தனையின்றசங்கம்.

௩௱௫உ. நகைக்கின்றனை-அரும்புகின்றாய்-கள்ளம்-வஞ்சம்- அழகியதேன்.

௩௱௬௬. தகரவரி-ஆறைந்து-தாது.

௩௱௬௭. மாதிவண்-மாதேயிங்குநீ-பாதிரி-பருதி-யிவ்விரண்டினடு-திரு- இவ்விரண்டுஞ்சேருதியுமந்தமும்புணர்ந்தபேர்-பாரி-பதி-திரு-பாரியாளுள்-அவன்மற்றையதாகியபதியானுன்.

௩௱௬௮. ஒருவலைவீசி-நீங்குதலைவிட்டு-சேலை-மீனை-பணம்.படப்போன்றவல்குல்-விற்றனம்-ஒழியுற்றமுலை-விற்றேரும்

௪௱உ. மதலை-பிள்ளை-தோணி.

௪௱௪. நாணிழந்ததனு- நாணில்லாதமெய்யுடையவேசை- காணையில்-காணும்வேல்-அதுவேல்போன்றகண்.

௪௱௰. நம்பிறைவர் - போர்செய்யிடத்துச்சென்று- அதைத்தணிவித்து-இவ்வூர்வருவேன்.

௪௱௧உ. இசையுற்றயாழ்-வெள்வளை-பொய்வசனியாதமென்னன்-தசை-ஆசை.

௪௱௧௬. கயமுனை-முலையானையொடுபகைக்குமுலை.